சங்க நூற் காட்சிகள்

கி. வா. ஜகந்நாதன்

அமுத நிலையம் லிமிடெட்



# பிடியும் களிறும்

# பிடியும் களிறும்

(சங்கநூற் காட்சிகள்)



கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம் லிமிடெட்
46, இராயப்பேட்டை ஹைரோடு,
சென்னை–600 014.

# முகவுரை

எட்டுத் தொகையில் ஒன்ருகிய கலித்தொகை கலிப் பாக்களால் அமைந்தது. பரிபாடல் என்பது பரிபாடல் என்ற பாவால் அமைந்தது. மற்ற ஆறு நூல்களும் ஆசிரியப் பாவால் அமைந்தவை. அகப்பொருளைப்பற்றிச் சொல்வதற்குக் கலிப்பாவும் பரிபாடலும் சிறந்தவை என்று தொல்காப்பியர் சொல்கிருர். இந்த இரண்டு வகைப் பாடல்களிலும் நாடகத்தைப் போல ஒருவர் பேசவும், மற்ருெருவர் அதற்கு விடை சொல்லவுமாகக் கூற்று வகைகளை அமைத்துச் சொல்லலாம். ஒவ்வொருவர் கூற்றும் தனித்தனியே முடிந்து தோன்றும்படி அமைக்கலாம். இப்படி உரையாடலாக வரும் கலிப்பாவை உறழ்கலி என்று சொல்வார்கள்.

அன்றியும் இசையோடு பாடுவதற்கு இந்த இரண்டு வகைப் பாடல்களும் ஏற்புடையவை. இப்பாக்களில் இடையிலே முடுகு வரும்; சில பகுதிகள் இடை மடக்கி வரும்.

நெறியறி செறிகுறி புரிதிரி மறியா
அறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை யறியும்
சான்றவர் இனமாக

என்பதுபோல வருவன முடுகு. இதற்கு அராகம் என்றும் பெயர் உண்டு: ராகம் என்பதையே அராகம் என்ருர்கள். அப்பெயரே அந்தப் பகுதி இசையோடு பாடுவதற்கு உரியது என்பதைப் புலப்படுத்துகிறது.

புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமாம் அன்ருே?
நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமாம் அன்ருே?

விண்டோய்கன் னுடனும் நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ
பண்டறியாதீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ?

என்று வருபவை இடைமடக்கு. நனவிற் புணர்ச்சி நடக்கு மாம் என்று இரண்டாவது அடியில் வருவதையே மீட்டும் நனவிற் புணர்ச்சி நடக்கலும் என்று மடக்கிப் பாடுவ தனுல் இடைமடக்காயிற்று. கலியின் உறுப்பாகிய தாழி சைகளில் இப்படி இடை மடக்கு வரும். இவ்வாறு வருவது பாடுவதற்கு நயமாக இருக்கும். ஆதலால் இதைக் கந்தருவ மார்க்கம் என்று சொல்வார்கள். கந்தருவம் என் பது இசை; கந்தருவ மார்க்கம்—இசை நெறி. இடை மடக்கி வரும் பகுதிகள் இசையில் அமைத்துப் பாட ஏற் பனவாக இருக்கும்.*

கலிப்பா என்பது தமிழில் உள்ள நான்கு வகைப் பாக் களில் ஒன்று. துள்ளலோசை உடையது. அளவிலே பெரியதாகப் பாடும்படி பல உறுப்புக்களை உடையது. கலித்தொகையில் கடவுள் வாழ்த்தையும் சேர்த்து 150 பாடல்கள் இருக்கின்றன. பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்ற ஐந்து பிரிவுகளையுடையது அது. கடவுள் வாழ்த்தைப் பாடினவர் மதுரை ஆசிரியர் நல்லந் துவனுர். பாலைக் கலியில் உள்ள 35 செய்யுட்களை இயற்றி னவர் சேரமான் பாலை பாடிய பெருங் கடுங்கோன். அவர் பாலைத்திணையைப் பாடுவதில் வல்லவர் என்பதை அவரு டைய பெயரோடு சேர்ந்த அடை மொழிகளே தெரிவிக்கும்.

---

* அடியுலகம் ஏத்தி அலர்மாரி தூவ
முடியுலக மூர்த்தி உறநிமிர்ந்தோன் யாரே
முடியுலக மூர்த்தி உறநிமிர்ந்தோன் மூன்று
கடிமதிலும் கட்டழித்த காவலன்நீ அன்றே (1245)

என்று சீவக சிந்தாமணியில் இடை மடக்கி வரும் பாடல் களின் உரையில், 'கந்தருவ மார்க்கத்தால் இடை மடக் கின' என்று நச்சினர்க்கினியர் எழுதுகிறுர். சிலப்பதி காரம் முதலிய பழைய நூல்களிலும், திருவிளையாடற் புராணம் முதலிய பிற்கால நூல்களிலும் தெய்வங்களின் துதியை ஒருவர் பாடுவதாக வரும் இடங்களில் இடை மடக்காக வரும் கந்தருவ மார்க்கச் செய் யுட்களைக் காணலாம்.

குறிஞ்சிக் கலியில் அமைந்த 29 பாடல்களைப் பாடியவர் கபிலர். அவர் குறிஞ்சித் திணையைப் பாடுவதில் திறமை பெற்றவர். மருதக் கலியை 35 செய்யுட்கள் அமையப் பாடியவர் மதுரை மருதன் இளநாகனார். 17 செய்யுட்களையுடைய முல்லைக் கலியை இயற்றினவர் சோழன் நல்லுருத்திரனார். நெய்தற் கலியாக அமைந்த 33 பாடல்களின் ஆசிரியர் நல்லந்துவனார்.

கலித்தொகைச் செய்யுட்கள் விரிவான பொருள் அமைதியை உடையவை; பாட்டு அந்த அமைப்புக்கு இடம் கொடுக்கிறது. ஆகவே, அழகான சித்திரம் ஒன்றை பலவகை நிலைக்களங்களும் அமைய நுணுக்கமான பகுதிகள் அழகு செய்ய விரிவான கிழியில் அமைத்தாற் போலக் கவிஞர்கள் கலிப்பாக்களை இயற்றியிருக்கிறார்கள். அவற்றைப் படிக்கையில் ஓசை இனிமையும் கவிப்பண்பும் பொருட்சிறப்பும் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன.

கற்றறிந்தார் ஏத்தும் கலி

என்றும்,

திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பன்
விருத்தக் கவிவளமும் வேண்டேம்–திருக்குறளோ
கொங்குவேள் மாக்கதையோ கொள்ளேம்; நனி ஆர்வேம்
பொங்குகலி இன்பப் பொருள்

என்றும் பாராட்டும்படி அமைந்த பாடல்களைக் கலித்தொகையில் காணலாம்.

இந்த அரிய நூலுக்கு நச்சினார்க்கினியர் அழகிய உரை ஒன்றை எழுதியிருக்கிறார்; எட்டுத் தொகை நூல்களில் குறுந்தொகைக்கும் அவர் உரை எழுதினாரென்று தெரிகிறது. அது இப்போது கிடைக்கவில்லை. கலித்தொகைக்கு அவர் எழுதிய உரையேனும் கிடைத்தது தமிழர்களின் பாக்கியம் என்றே சொல்ல வேண்டும்.

இதை முதல் முதலாக உரையுடன் அச்சியற்றிவெளிப் படுத்தியவர் யாழ்ப்பாணத்துப் பேரறிஞராகிய திரு. சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள். அதன்பின் மகாமகோ பாத்தியாய டாக்டர் ஐயரவர்களுடன் இருந்து பழகித்

தமிழாராய்ச்சி செய்துவந்த தமிழ்ப் பெரும்புலவர் திரு. இ. வை. அனந்தராமையரவர்கள் இந்த நூலை நன்கு ஆராய்ந்து, பலவகையிற் சோதனை செய்து, ஒப்புமைப் பகுதிகளையும் பலவகைக் குறிப்புகளையும் தொகுத்துச் சேர்த்து 1925-இல் வெளியிட்டார்கள். அவர்கள் அப் பதிப்பிற் செய்திருக்கும் வேலை அறிஞர்கள் கண்டு வியப்ப தற்குரியது. அதன்பின் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் ஒரு பதிப்பை வெளியிட்டுள்ளனர்.

இந்தப் புத்தகத்தில் கலித்தொகையிலிருந்து எடுத்த மூன்றுபாட்டுக்களின் விளக்கங்கள் உள்ளன. கடவுள்வாழ்த் தும் பாலைக் கலியிலுள்ள பாடல் ஒன்றும் குறிஞ்சிக் கலியி லுள்ளது ஒன்றும் இதில் இருக்கின்றன. வேறு சில பாடல் களின் விளக்கத்தையும் சேர்க்க எண்ணினேன். இடமின் மையினால் வேறு ஒரு சமயம் அவற்றை வெளியிடலா மென்று நினைத்து இந்த மூன்று பாடலோடு நிறுத்திக் கொண்டேன். முதற் பாட்டு 17 அடிகளை உடையது. இரண்டாவது பாட்டு 22 அடிகளையும், மூன்றாவது பாட்டு 51 அடிகளையும் உடையவை. ஆகவே இப்புத்தகத்தில் 90 அடிகளுக்கு விளக்கம் இருக்கிறது.

கடவுள் வாழ்த்துப் பாட்டுச் சிவபெருமானுடைய மூன்று ஆடல்களைப்பற்றிச் சொல்லுகிறது. தமிழ்நாட்டில் இசையும் கூத்தும் மிக விரிவாகப் பயின்றிருந்த காலத்தில் எழுந்தது இப் பாட்டு. ஆதலின் இப் பாட்டில் சொல்லப் பெற்ற செய்திகள் அக்காலத்தாருக்குத் தெளிவாகத் தெரிந்திருக்கும். இப்போது இசைத் தமிழும் நாடகத் தமிழும் மறைந்து போயின. அப்பகுதிகளைச் சார்ந்த இலக்கியங்களும் இல்லையாயின. அவற்றின் இலக்கணத் தைச் சொல்லும் தனி நூல்களும் கிடைக்கவில்லை. இலக்கி யங்களினிடையே கூத்தைப் பற்றியும் இசையைப்பற்றியும் வரும் இடங்களில் அடியார்க்கு நல்லார் முதலிய உரை யாசிரியர்கள் ஓரளவு அச் செய்திகளை விளக்குகிறார்கள். மேற்கோளாகச் சில செய்யுட்களைக் காட்டுகிறார்கள். அவற்றிலிருந்து பழங்காலத்தில் பல பல இசையிலக்கண நூல்களும் கூத்திலக்கண நூல்களும் வழங்கி வந்தன என்று அறிகிறோம்.

கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்றமூன்று கூத்துக்களைப் பற்றிய செய்திகளைக் கடவுள் வாழ்த்தில் காண்கிறோம். இவற்றின் இலக்கணங்களைத் தெளிவாகவும்

விரிவாகவும் சொல்லும் நூல்கள் இப்போது இல்லை. சிலப்பதிகாரம், அதன் உரை, நச்சினார்க்கினியர் உரை என்பவற்றில் வரும் செய்திகளைக் கொண்டும் பிற்கால நூல்கள் சிலவற்றைக் கொண்டும் தெரிய வரும் செய்திகளை ஒருங்கு தொகுத்து எண்ணி. எனக்குத் தோற்றிய வகையில் விளக்கியிருக்கிறேன். ஆயினும் காபாலம் என்ற கூத்தின் இலக்கணம் தெளிவாக விளங்கவில்லை.

இறைவனுடைய தத்துவத்தை எவ்வாறு தமிழ்ப் புலவர்கள் நினைந்து, அவன் கருணையை வியந்து பாராட்டுகிறார்கள் என்பதற்கு இந்தக் கடவுள் வாழ்த்துப் பாட்டு ஒரு சிறந்த உதாரணம். இறைவன் மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாதவன் ஆனாலும், கருணையால் திருவுருவம் பூண்டு பல அருள் விளையாடல்களை நடத்துகிறான் என்பதை அவர்கள் நன்கு தெளிந்திருந்தனர். நாம் அவன்பால் காட்டும் அன்பு மிக மிகக் குறைந்தது என்றும், அவன் நம்மிடம் வைத்த அருள் மிக மிகப் பெரியதென்றும் எண்ணி அவன் நமக்கு எளியனாக வரும் கருணையைப் பாராட்டினார்கள். கூளிகளையும் அடியாராக்கி ஏவல் கொள்ளும் சிறப்பு இறைவனிடம் இருக்கும்போது நம்மைப் பணி கொள்வது என்ன வியப்பு?

பாலைக்கலியிலிருந்து எடுத்த பாட்டு, பாலையின் வெம்மையினூடே காதலின் தண்மையைப் புலப்படுத்துகிறது. காதலின் ஆற்றலையும், காதலையுடையார் தம் நலம் நோக்காது தம் காதற்குரியவர்கள் நலத்தையே பேணுவதையும் விலங்குகளின்மேல் வைத்துச் சொல்வது பழங் கவிகளின் இயல்பு. பிடியைப் பாதுகாக்கும் களிறு, பெண் புறாவைப் பேணும் ஆண் புறா, பிணைமானைக் காப்பாற்றும் கலைமான் என்னும் மூன்றும் ஈரம் வறண்ட பாலையிலும் காதல் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடச் செய்கின்றன.

குறிஞ்சிக்கலிப்பாட்டு, தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள காதலை தோழி வெளியிட்டு அவ்விருவரும் மணம் செய்து கொள்வதற்கு உதவி புரியும் செய்தியைச் சொல்கிறது. ஆற்றில் நீராடும்போது தலைவி நீரோடு போக, அவளை ஒரு தலைவன் காப்பாற்றினான் என்று சொல்லித் தோழி அவர்களிடையே உள்ள தொடர்பைப்புலப்படுத்துகிறாள். இவ்வாறு கூறும் முறையை அறத்தொடு நிற்றல் என்று சொல்வார்கள். புனலிலே போன தலைவியைக்

காப்பாற்றி அவளோடு தொடர்புடையவனுனுன் என்று சொல்வதால் இது புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நின்றது என்ற வகையைச் சாரும்.

கற்பின் உயர்வைத் தோழி எவ்வளவு அழகாகவும் நுட்பமாகவும் எடுத்துச் சொல்கிருள்! செவிலி தலைவியைக் கன்னியென்று எண்ணிக் கொண்டிருக்கிருள். "என் தோழி அருமழை தரல் வேண்டின், தருகிற்கும் பெருமையளே!" என்று சொல்கிருள் தோழி. அந்தக் கற்பைப் பாதுகாக்கும் கடமை யாவர்க்கும் உரியது என்று வற்புறுத்துகிருள். மழை பெய்வதும், வள்ளிக் கிழங்கு விளைவதும், தேன் அடைகள் மிகுதியாக இருப்பதும், தினை விளைவதும் எல்லாம் கற்பினுல் அமைவன என்று சொல்கிருள்; ஆடவர் வேட்டையிலே நல்ல வெற்றியை அடைவதற்கும் குறவர் மடமகளிர் தம் கேள்வரைத் தொழுதெழும் கற்பே காரணம் என்று கூறுகிருள்.

இந்தச் செய்தியை அறிந்தபோது தலைவியின் தமையன்மார் கோபத்தால் படபடத்தார்களாம். மலைநாட்டு மக்கள் வீரம் மிக்கவர்கள்; மானம் பொருதவர்கள். அவர்களுடைய அறிவு தொழிற்படுவதற்குமுன்னே அந்த மானம் முன்னே வந்து துள்ளுகிறது. 'தெரிகணை நோக்கிச் சிலை நோக்கிக்' கண் சேந்தார்கள். இப்படி ஒன்றரை மணிநேரம் அவர்கள் உறுமினுர்கள். மெல்லமெல்ல அறிவு தலைக்காட்டிற்று. சிந்தனை எழுந்தது. 'அவர்கள்மேல் தவறு ஒன்றும் இல்லையே!" என்று யோசித்தார்கள். அப்போது எழுந்த கோபம் நாணத்தால் அழிந்தது; நிமிர்ந்த தலை கவிழ்ந்தது. "தெருமந்து சாய்த்தார் தலை" என்று தோழி சொல்கிருள்.

தோழிக்கும் தலைவிக்கும் இடையே நடக்கும் உரையாடல் மிகவும் நயமாக இருக்கிறது. தலைவி, "நான் எப்படி அவ்வளவு பேருக்கு நடுவில் நாணமில்லாமல் அவரோடு சேர்ந்து அமர்வேன்!" என்கிருள். அதை நினைந்து நாணுகிருள்; மகிழ்ச்சியடைகிருள்; களவுக்காதலில் பட்ட தொல்லைகளெல்லாம் இனித் தீருமென்று ஆறுதல் பெறுகிருள்.

தலைவன் மணம் செய்துகொள்ள வருகிருன். முகூர்த்தம் வைக்கும் அறிவனுடனும், சான்றவருடனும் வரு

கிறுன். திருமணம் நன்ருக நடக்கும் என்பதற்கு என்ன தடை?

இந்தப் பாடல்களின் விளக்கங்கள் பெரும்பாலும் நச்சினுர்க்கினியர் உரையைத் தழுவியே அமைந்திருக்கின்றன. அப்பெரும் புலவருடைய உரையைப் படிக்கும்போது, "எத்தனை விரிந்த அறிவு!" என்ற வியப்பே எழுகிறது. சில இடங்களில் நச்சினுர்க்கினியர் உரைக்கு வேறுபட்ட விளக்கத்தை இந்தப் புத்தகத்தில் காணலாம்.

இதற்கு முன் வெளியான மணிவிளக்கு, குறிஞ்சித் தேன், தாமரைப் பொய்கை என்ற மூன்று நூல்களையும் தமிழன்பர்கள் சுவைத்துப் பாராட்டி ஊக்கம் அளித்து வருகிருர்கள். இது நான்காவது புத்தகம். இனியும் எஞ்சியுள்ள நான்கு தொகை நூல்களிலிருந்து எடுத்த செய்யுட்களுக்கு விளக்கம் எழுதி நான்கு புத்தகங்களாக வெளியிட எண்ணியிருக்கிறேன். முருகன் திருவருள் இந்த முயற்சியை நிறைவேறச் செய்யும் என்று நம்புகிறேன்.

25–4–52 கி. வா. ஜகந்நாதன்.

குறிப்பு

இந்த இரண்டாம் பதிப்பில் 'கருங்கூத்து' என்ற தலைப்பில், வேறு ஒரு பாடலுக்குரிய விளக்கத்தையும் சேர்த்திருக்கிறேன். குறிஞ்சிப் பகுதியில் வரும் பாடல் அது.

25–12–59 கி. வா. ஜ.

# உள்ளுறை







# ஆடும் பெருமான்

கடவுள் நம்முடைய புலன்களால் அறியப்படாத நிலையில் இருப்பவர். அவரைப் பற்றி நாம் பேசி எல்லை காண முடியாது. எண்ணவும் இயலாது. வாக்குக்கும் மனத்துக்கும் அப்பாற்பட்டவர் கடவுள் என்று வேதம் சொல்கிறது; மற்ற நூல்களும் சொல்கின்றன. அவர் உருவம் இல்லாதவர்; அளவு இல்லாதவர்; குணங்கள் இல்லாதவர். ஆகையினால் பொறிகளால் உணரப் படாதவர்; மனத்தால் நினைக்க இயலாதவர். ஆயினும் உலகத்தில் உள்ள சமயங்களில் பெரும்பாலானவை, கடவுளை ஏதேனும் அடையாளம் ஒன்றையோ பல வற்றையோ வைத்துக் கொண்டு வழிபடும் முறையை ஏற்றுக் கொண்டிருக்கின்றன.

கண்ணாலே காண முடியாத சொற்களையும், அந்தச் சொற்களின் வாயிலாக உணரும் கருத்துக்களையும் எழுத் தால் எழுதிப் பிறருக்கு அறிவிக்கிறோம். உள்ளத்திலே தோன்றும் நினைவுகளையும் உணர்ச்சிகளையும் முதலில் வாயினால் வெளியிடுகிறோம். அதுதான் மொழி அல்லது பாஷை. பேசும் நிலையில் இருந்த மொழி நாளடைவில் எழுத்துருவமும் பெற்றது. பேசும் வடிவத்தை ஒலி வடிவம் என்றும், எழுதுவதை வரி வடிவம் என்றும் சொல்வார்கள். மனத்தில் வடிவமே இல்லாமல் பிறந்த நினைவுகளையும் உணர்ச்சிகளையும் முதலில் ஒலி வடிவத் திலே வடித்துப் பேசுகிறோம்; பிறகு வரி வடிவத்திலே

வடித்து எழுதுகிறோம். மனிதனுக்கு இந்த அற்புத ஆற்றலைக் கடவுள் கொடுத்திருக்கிறார்.

ஆனால், நாம் பேசும் மொழியும் எழுதும் எழுத்தும் நம்முடைய மனத்திலே தோன்றும் கருத்தை அறிவிக்கும் அடையாளமே ஒழிய, அந்தக் கருத்தின் வேறு உருவம் அல்ல. மனத்தில் தோன்றும் கருத்தும் உணர்ச்சியும் மனித சாதி முழுவதுக்கும் பொதுவானவை. அவற்றில் வேறுபாடில்லை. காரணம், மனம் என்ற ஒன்று உயிருக்கு அடுத்தபடி, காலம், இடம், சாதி, சமயம் என்ற பிரிவுக்கு அகப்படாமல் நிற்கிறது; அல்லது அவற்றிற்கெல்லாம் பொதுவாக நிற்கிறது என்று சொல்லலாம். அந்த மனத்தினால்தான் மனிதனே வாழ்கிறான், தாழ்வடைகிறான் என்றும், மனமே மனிதனை ஆக்குகிறது என்றும் சொல்வது உண்டு.

மனம் மனித சாதி அனைத்துக்கும் பொது; அதில் தோன்றும் கருத்துக்களும் உணர்ச்சிகளும் அப்படியே பொதுவானவை. அவற்றை வெளியிடும்போது மாத்திரம் அவை வெவ்வேறு வடிவம் கொள்கின்றன; மொழியாகிய ஒலி வடிவத்தை அடைகின்றன. அந்தக் கருத்துக்கள் ஒலி வடிவத்தை அடைகின்றன என்று சொல்வதை விட, அந்தக் கருத்துக்களை மக்கள் ஒலி வடிவமாகிய அடையாளத்தால் வெளிப்படுத்துகிறார்கள் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். அப்படி ஒலி வடிவத்தில் வந்தவை பிறகு வரி வடிவத்தில் எழுத்தாக நிற்கின்றன.

எல்லா மக்களும் தங்கள் கருத்துக்களை ஒரே மாதிரி வெளிப்படுத்துவதில்லை. அப்படி இருந்தால் உலகம் முழுவதும் ஒரே மொழிதான் இருக்கும். 'தேசங்கள் தோறும் பாஷைகள் வேறு.' பேசும் பாஷைகள் வேறுபடுவதைப் போலவே எழுதும் எழுத்துக்களும் வேறுபடுகின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் தனி மொழி, தனி

எழுத்து என்று இருப்பதில்லை. ஒரு கூட்டத்தினருக்குப் பொதுவான மொழி, பொதுவான எழுத்து என்ற நியதி இருக்கிறது.

மனிதன் நினைத்ததையும் உணர்ந்ததையும் முற்றும் சரியாகப் பேசுகிருன் என்று சொல்ல முடியாது. நினைத்ததையே பேசுவதானால் நினைத்தது அவ்வளவையும் பேசி விடலாம்; ஒரு பாத்திரத்தில் உள்ள பண்டத்தை வேறு பாத்திரத்திற்கு மாற்றுவது போல மனத்திலுள்ளதை வாக்குக்கு மாற்றிவிடலாம். பேச்சு, நினைப்புக்கும் உணர்ச்சிக்கும் அறிகுறியே ஒழிய நினைப்பே ஆகாது. அதனால் நினைத்ததை அப்படியே பேச்சில் வடித்துவிட முடியாது. பேச்சுக்குள் அகப்படாத நினைப்பு உண்டு; அகப்பட்டவையும் நினைப்பின் முழு இயல்போடு வெளிப் படுவதில்லை. ஆனாலும் நினைப்பையும் உணர்ச்சியையும் கூடியவரையில் பேச்சாகிய அடையாளத்தால் வெளிப் படுத்துகிறோம். பல பல ஆண்டுகளாகப் பல பல மனிதர் கள் பழகிப் பழகி மொழியாகிய அடையாளத்தை, நினைப் பின் பெரும் பகுதியை வெளியிடும் ஆற்றல் உள்ளதாகச் செய்து வருகிருர்கள். ஆனாலுங்கூட நினைப்பு அவ்வளவை யும் பேச்சாக மாற்றுவது முடியாத காரியம்.

மற்றொரு கருத்து: ஒருவர் பேசும்போது அதைக் கேட்ட நாம் அவருடைய நினைப்பையும் உணர்ச்சியையும் நன்றாக அறிந்து கொள்கிறோம். அவரைப் போலவே. சில சமயங்களில் உணர்கிறோம். அப்படி இருக்க, மொழியால் உணர்ச்சியின் ஆற்றலை அப்படியே வெளியிட முடியாது என்பது எப்படி உண்மையாகும்? இப்படி ஓர் ஐயம் எழ லாம். நாம் ஒருவர் பேசுவதைக் கேட்கிறோம்; அவர் கூறும் வார்த்தைகளின் நேர்முகமான பொருளால் மட்டும் பேசுபவரது கருத்தையும் உணர்ச்சியையும் உணர்வ தில்லை நாமும் அவரைப் போலக் கருதி உணர்ந்திருப்ப தால் அவர் பேசிய பேச்சாகிய குறிப்பை வைத்துக்

கொண்டு, சொந்த அநுபவத்தால் ஊகித்து அவருடைய உள்ளத்தை உணர்ந்து கொள்கிறோம். பேச்சு வெறும் அடையாளமே ஒழிய உணர்ச்சியின் மறு உருவம் ஆகாது.

இதே போல, பேசும் பேச்சை எழுத்தில் வடிக்கும் போதும் பேச்சின் ஆற்றல் முழுவதையும் எழுத்தில் கொண்டுவர முடிவதில்லை. சில ஒலிகளை எழுத்திலே எழுத முடியாது. பேசும்போது நாம் உணர்ச்சி வேகத்தால் வெளிப்படுத்தும் தொனி பேதங்களையும், விரைவு மிகுதியையும், குறைவையும் எழுத்தில் வெளியிட முடியாது.

மனத்துக்கு உட்பட்ட கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் பேச்சு என்னும் அடையாளத்தில் வடிப்பதிலும், எழுத்து என்னும் அறிகுறியில் வடிப்பதிலும் குறைபாடு உண்டு; அவற்றில் முழுமையைக் காண முடியாது. அதற்காகப் பேசாமல் எழுதாமல் இருந்து விட முடியுமா? அவற்றை அடையாளமாகக் கொண்டு நம்முடைய அறிவாற்றலாலும் உணர்ச்சிச் சிறப்பாலும் ஒருவாறு கருத்தை வெளியிட்டும் அறிந்து கொண்டும் வருகிறோம்.

கடவுள் மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாதவர். ஆனாலும் அவருடைய திருவருளைப் பெறுவதற்கு மக்கள் முயல்கின்றார்கள். மனத்தில் நிகழ்பவற்றைப் பேச்சாகவும் பின்பு எழுத்தாகவும் வடிவமைத்தவர்கள் அல்லவா? கடவுளையும் அப்படி இரண்டு படி கீழே இறக்குகிறார்கள்; கடவுளை நேர் முகமாக அறிய ஒண்ணாது; ஆதலின் மனத்தில் நினைக்கும் நிலைக்கு அவரை இறக்கினார்கள்; அடையாள வகையால் தியானம் செய்தார்கள். பிறகு புறக்கண்ணிற்குக் காணலாம்படி உருவமும், காதுக்குக் கேட்கும்படி

நாமமும் அமைத்து வழிபட்டார்கள். தியானத்துக்குப் பற்றுக் கோடான அறிகுறிகளும் வழிபாட்டுக்குப் பற்றுக் கோடான திருவுருவங்களும் நாமங்களும் கடவுளை உணரும் அடையாளங்கள். ஒரு வகையில் பார்த்தால் கடவுளாகவே எண்ணி உணர்ந்து இன்புறத் தக்கவை; ஆனால் கடவுளே அல்ல.

மொழியும் எழுத்தும் எப்படி நினைப்பு ஆகாவோ அப்படியே தியானிக்கும் உருவமும் காணும் உருவமும் கடவுள் ஆகா. ஆயினும் மொழியும் எழுத்தும் மனித முயற்சியின் விளைவாக நினைப்பை உணரும் கருவிகளாகவும் அடையாளங்களாகவும் எப்படி உதவுகின்றனவோ, அப்படியே கடவுளின் பெயர்களும் உருவங்களும் கடவுளின் அருளை நுகரும் கருவிகளாகவும் அடையாளங்களாகவும் உதவுகின்றன. கருத்து மனித சாதிக்கே பொதுவாக இருந்தாலும் பேச்சும் எழுத்தும் நாடுதோறும் வேறாக இருப்பது போல, கடவுள் ஒருவராக யாவருக்கும் பொதுவாக இருந்தாலும் அவருடைய திருவுருவங்களும் வழிபாட்டு முறைகளும் வேறு வேறாக இருக்கின்றன. கடவுள் வேறு வேறு அல்ல; கடவுளை அறியவும் உணரவும் வைத்த அடையாளங்களே வேறு வேறு ஆகும். அடையாளங்கள் பலவாக இருப்பதனால் பொருளும் பலவாக இருக்கவேண்டும் என்பது இல்லை. கல் என்ற ஒரு பொருளையே வெவ்வேறு மொழிகளில் வெவ்வேறு விதமாகக் குறிக்கிறார்கள். அப்படிக் குறிக்கும் சொற்களாகிய ஒலி வடிவங்களும், எழுதும் வரிவடிவங்களும் வேறு வேறு. எத்தனை மொழிகள் உலகில் உண்டோ அத்தனை மொழிகளிலும் கல் என்பதற்கு வேறு வேறு சொற்கள் இருக்கின்றன. அது மாத்திரமல்ல; ஒரே மொழியில் கூட அதைக் குறிக்க ஒன்றிற்கு மேற்பட்ட சொற்கள் இருப்பதும் உண்டு. இவ்வாறு சொல்லுருவங்களால் கல் பலவேறாக இருந்தாலும் கல் என்ற பொருள்

ஒன்றுதான். கல்லைக் குறிக்கும் சொல் வேறுபடுமே யொழியக் கல் வேறுபடாது.

கடவுளை வெவ்வேறு உருவத்தில் வெவ்வேறு வகையில் மக்கள் வழிபட்டாலும் கடவுள் ஒருவரே. ஒரே மொழியில் சில பொருளுக்குப் பல பெயர்கள் இருப்பது போல ஒரே சமயத்தில் கடவுளை வெவ்வேறு உருவங்களால் அன்பர்கள் வழிபடுவது உண்டு. அதனால் கடவுளர் பலர் என்று கொள்வது கூடாது. அந்த உருவங்கள் உட்கருத்தைக் கொண்டவை. கடவுளின் தன்மையை உணர்ந்த சான்றோர்கள் அவருடைய திருவருளையே துணையாகக் கொண்டு அநுபவத்தில் உணர்ந்து வெளியிட்டவை. கல் என்ற சொல் எப்போது யாரால் உண்டாயிற்று என்று தெரியாவிட்டாலும் பல காலம் அதையே சொல்லிச் சொல்லிப் பழகிவிட்டோம். அப்படியே கடவுளின் திருவுருவங்களாக நாம் வணங்கும் விக்கிரகங்கள் பல காலமாகப் பெரியவர்களால் வழிபடப் பெற்று வருகின்றன. அவற்றை வழிபட்டு அவர்கள் பயன் பெற்றிருக்கிறார்கள். ஒரு பொருளின் மதிப்பு அதனால் உண்டாகும் பயனைப் பொறுத்தது. இந்தத் திருவுருவங்களும் வழிபாட்டு முறைகளும் ஞானம் பெறவும் கடவுள் அருளை அடையவும் பல பெரியோர்களுக்குப் பயன்பட்டிருத்தலால் இவற்றை நாமும் மேற்கொண்டு வருகிறோம்.



நம்முடைய நாட்டில் சிவபெருமானையும் திருமாலையும் அதிகமாக வழிபடுகிறோம். சிவபெருமானை வழிபடுகிறவர்களைச் சைவர்களென்றும், திருமாலை வழிபடுகிறவர்களை வைணவர்கள் என்றும் குறிக்கிறோம். சைவர்கள் சிவபெருமான், விநாயகர், முருகன், அம்மை முதலிய

மூர்த்திகளை வழிபடுகிறார்கள். வைணவர்கள் திருமால், திருமகள் முதலிய மூர்த்திகளை வழிபடுகிறார்கள். அந்த அந்த மூர்த்திகளின் திருவுருவங்களும் திருவிளையாடல் பல பலவாக விரிந்திருக்கின்றன. சிவ வழிபாடும் திருமால் வழிபாடும் தமிழ் நாட்டில் மிக மிகப் பழங்கால முதலே இருந்து வருகின்றன. சங்க காலத்து நூல்களில் இந்தக் கடவுளரின் புகழைப் பல இடங்களில் காணலாம். எட்டுத் தொகை நூல்களில் ஒவ்வொன்றுக்கும் கடவுள் வாழ்த்து இருக்கிறது. கலித்தொகை என்னும் நூலில் உள்ள கடவுள் வாழ்த்துச் சிவபிரானைப் பற்றியது; நல்லந்துவனார் பாடியது. சிவபிரானுடைய திருக்கோலங்களில் சிலவற்றையும் திருவிளையாடல்களில் சிலவற்றையும் அந்தப் பாட்டில் அவர் சொல்லுகிறார்.

இந்த உருவங்களும் செயல்களும் அடையாள வகையினால் கடவுளை நினைக்கப் பயன்படுவன; அறிகுறிகளாக நிற்பன. சிவபெருமான் சொல்லால் அளந்து எல்லை கட்ட முடியாதவன்; மனத்தால் எட்ட அரியவன். ஆனாலும் அடியார்களுக்கு அருள் செய்யும் பொருட்டுத் திருவுருவங் கொண்டு திருவிளையாட்டயர்கிறான்.

நாம் எப்படிக் கூறினாலும் அதற்கு அப்பால் நிற்கிறான்; எப்படிக் குறித்தாலும், கருதினாலும் அதற்கு மேலும் செல்கிறான். அவன் கூறப்படாத பொருள்; கூறாமல் உள்ள பொருள். குறித்ததன் மேற்செல்லும் பரம்பொருள். ஆனாலும் அவனை உருவாலும் செயலாலும் அடையாளமிட்டு வழிபடுகிறோம்.

அவனுடைய பரிவாரங்கள் யார் தெரியுமா. தேவர்கள் பலர் அவனுடைய திருவருளுக்கு ஏங்கி நிற்கிறார்கள். ஆனாலும் அவன் தனக்கு உரிய சுற்றத்தாராகப் பேய்களைக் கொண்டிருக்கிறான்; கடுமையான பேய்கள்; கடுங்கூளிகள். உயர் குணம் உடையவர்களை

வழிக்குக் கொண்டுவருதல் சிறப்பு அன்று; அவர்கள் தம்முடைய இயல்பினுலேயே நன்மையை அடைகிருர்கள். இழிகுணம் உடையவர்களைத் திருத்தி வழிப்படுத்துவதுதான் அருமை. இழிந்தவர்களோடு சேரும் ஒருவன் மன வலியில்லாதவனுக இருந்தால் அவனும் அவர்களுடைய சார்பினுல் கெட்டுப்போவான். அவர்களிடையே பழகியும் கெடாமல் இருக்க மன வலிமை மிகுதியாக வேண்டும். அவர்களோடு பழகி அவர்களை வழிக்குக் கொணரவோ மனவலியும் பேராற்றலும் வேண்டும். சிவபெருமான் தன்னுடைய அருளாற்றலால் கூளிகளையும் ஒன்று கூட்டித் தன் ஏவலுக்குப் பயன்படுத்திக் கொள்கிருன். தான் ஆடும்போது அவைகளையும் ஆடிக் களிக்கச் செய்கிருன். பிற இடங்களில் நல்லவர்களோடு போரிட்டுக் கேட்டை உண்டாக்குவது கூளிகளின் இயல்பு. இறைவனேடு சார்ந்த பேய்களோ, இறைவனைச் சார்ந்த நல்லவர்களுக்குத் தீமை புரிபவர்களை அவன் ஏவலின்படி சென்று போர் புரிந்து அழிக்கும் தன்மையை உடையவை. இறைவன் திருக்குறிப்பை அறிந்து விரைவாகச் சென்று தீயவர்களோடு போரிட்டு, புறங்காட்டாமல்—மாருமல்—வெற்றி கொள்ளும் இயல்பை உடையவை. இவ்வாறு கூளிகள் செய்யும் நல்ல போர்கள் இறைவன் ஏவலால் நடைபெறுகின்றன; அவன் ஏவி நடத்தும் போர் அவை; ஆகவே அவன் கடுங்கூளிகள் இயற்றும் மாருப் போரை உடையவன்.

சிவபெருமானுடைய திருவுருவம் செக்கச் செவேலென்று இருப்பது. அவனுடைய சடாபாரம்கூடச் சிவப்பானதுதான். அந்தச் சிவப்புப் பிழம்பை நோக்கும்போது நம் கண்ணில் பளிச்சென்று தெரிவது அதனிடையே தோன்றும் கருமைதான். சிவப்புக்கு நடுவே சிறு கறுப்புத் தெரிகிறது. நீல மணிபோலப் பளபளக்கிறது. அது வேறு ஒன்றும் அன்று. இறைவனுடைய திருக்கழுத்து நீல மணி போன்ற அழகிய மிடறு. நீலகண்டன் என்ற

திருநாமம் உடையவன் இறைவன். தேர்வகள் அமுதம் கடைந்தபோது பாற்கடலில் எழுந்த ஆலகாலம் என்னும் நஞ்சைக் கண்டு அவர்களெல்லாம் அஞ்சி நடுங்கி ஓடி வந்தார்கள். அந்த ஆலத்தை அடக்காவிட்டால் அது தேவர்களையெல்லாம் படுசூர்ணமாக்கிவிடும் என்று தோன்றியது. சிவபிரான் அந்த நஞ்சை உண்டு திருக் கழுத்திலே தேக்கிக்கொண்டான். அது அந்தக் கழுத்தில் நீல மணி போல நிற்கிறது; அமரர்களுக்கு வாழ்வளித்த பெருங்கருணையுடையவன் சிவபெருமான் என்பதை நினை வுறுத்திக் கொண்டு விளங்குகிறது. ஒரு முறை அவன் திருவுருவத்தை நினைத்தாலும் பார்த்தாலும் அந்தச் செம்மைப் பிழம்பினிடையே பளிச்சென்று மணி மிடறு தெரிகிறது. ஒரே செஞ்சோதியாக இருப்பதால் மற்ற உறுப்புக்களை மெல்ல நிதானித்துப் பார்க்க வேண்டும். ஆனால் மணிமிடறோ வேறு நிறமாக இருப்பதால் விளக்க மாகத் தெரிகிறது.

மணிமிடற்றுப் பெருமானுக்கு எட்டுத் திருக்கரங்கள் உண்டு. எண்டோள் வீசி ஆடும் பிரான் அவன். திக்குக் களே இறைவனுடைய கைகளாக இருக்கின்றன. அதனால் எட்டுக் கைகளை உடையவன் என்று நூல்கள் சொல் கின்றன. எட்டுத் திக்கிலிருந்தும் அடியவர்கள் வந்தால் அங்கங்கே அப்படி அப்படியே நிறுத்தி, "இந்தாருங்கள்!" என்று அருளை வழங்கும் வண்மை படைத்தன அவை. ஒரு வீட்டுக்கு நான்கு புறமும் வாயில்கள் இருந்தால் எந்தப் பக்கத்தில் வந்தாலும் நேரே வீட்டுக்குள் நுழைய லாம். வாயில் எங்கே இருக்கிறது என்று கேட்டுத் தொல்லையுற வேண்டாம். மதுரை முதலிய ஊர்களில் உள்ள திருக்கோயில்களுக்கு நான்கு புறமும் வாயில்கள் உண்டு. எங்கிருந்து வந்தாலும் கோயில்களுக்குள் தடை யின்றிப் புகலாம். இறைவன் திருக்கரங்கள் யார் எங்கிருந்து வந்தாலும் ஏற்றுக்கொண்டு அருள் புரிய ஆயத்தமாக இருப்பதைக் காட்டுகின்றன. அவனுடைய

கருணையை என்ன என்பது! அன்று அவன் ஆலகால விடத்தை மிடற்றில் வைத்து ஆணவமிக்க அமரரைக் காப்பாற்றினன். பாற்கடலில் பிறந்த அமுதம் அவர்களுக்கு உயிர் தரவில்லை. சிவபிரானுகிய கருணைக் கடலில் பிறந்த அருளாகிய அமுதமே அவர்கள் உயிரைக் காப்பாற்றியது. அந்தக் கருணைமிர்தத்துக்கு அறிகுறியாக விளங்குவது மணிமிடறு. அவன் கருணை அந்தப் பழங்காலத்தில் மாத்திரம் வெளிப்பட்டது என்பது இல்லை; தேவர்களுக்கு மாத்திரம் பயன் தரும் என்பதும் இல்லை. இந்தக் காலத்திலும் வருங்காலத்திலும் பயன் படும். எவ்விடத்தில் இருப்போருக்கும் அவன் அருள் தரக் காத்திருக்கிருன். இந்த உண்மையை அவனுடைய எட்டுக் கரங்களும் உணர்த்துகின்றன.

நவ்வந்துவனுர் என்னும் புலவர் மணிமிடற்றுப் பெருமானை நேரே விளித்துப் பேசுகிறார்; "பெருமானே, உன்னுடைய உருவமும் ஆடலும் நினைக்க நினைக்க இன்பத்தைத் தருவன. நீ வாக்குக்கும் மனத்துக்கும் அப்பாற்பட்டவன். ஆனுலும் நாங்களெல்லாம் நினைக்கவும் பேசவும் இயலும்படி பல திருவுருவங்களோடு எழுந்தருளியிருக்கிருய். கூற முடியாமல், நினைத்ததற்கு அப்பாலும் செல்லும் இயல்புடையாய். ஆனுலும் கூளிகளுக்கும் அருள் செய்து அவற்றைக் கொண்டு தீயோரை அழிக்கும் மாருத போரை உடையாய். அமரர் பொருட்டு ஆலத்தை உண்டு கறுத்த மணிமிடற்றை உடையாய்; எட்டுக் கைகளை உடையாய்" என்று சொல்கிருர்

> கூருமல், குறித்ததன்மேற் செல்லும்—கடுங்கூளி
> மாருப்போர் மணிமிடற்று எண்கையாய்!

★

உணர்த்த உணரும் தன்மையை உடையவை உயிர்கள் இறைவன் தன் தன்மையையும் உயிர்களின் தன்மை

யையும் வேதத்தின் மூலம் வெளிப்படுத்தினன். வேதம் ஆதி நூல், இறை நூல் என்று சொல்லப் பெறும். அதன் பால் பல இரகசியங்கள் அமைந்துள்ளன. நமக்கு விளங்காத பல செய்திகளை வேதம் விளக்குகிறது. அப்படி மறைந்த பொருள் உடைமையின் மறை என்ற பெயருடையது வேதத்தை நான்கு என்று சொல்வார்கள். அந்த நான்கிலும் தனித்தனியே பல கிளைகள் உண்டு. இறைவனிடமிருந்து வந்தமையால் வேதத்தை ஒன்ருகச் சொல்வார்கள்; அது நான்காக வகுக்கப் பெற்றமையால் நான்மறையென்றும்சொல்வார்கள்; கிளைகளாகிய சாகைகள் பல இருப்பதால் பல மறைகள் என்றும் கூறுவதுண்டு.

வேதங்கள் மிகப் பழமையானவை. அவை ஏனைய நூல்களைப்போல வைத்துப் பொருள் செய்ய இயலாதவை. அவற்றை நன்ருகத் தெளிவதற்குத் துணையாக ஆறு நூல்கள் இருக்கின்றன. வேதத்தை நன்கு உணர இந்த ஆறு நூல்களும் பயன்படுகின்றன. ஆறு சாஸ்திரங்களும் வேதத்திற்கு அங்கங்கள்; ஆதலின் அவற்றை ஆறு அங்கம் என்று சொல்வார்கள்.

வேதத்தின் எழுத்து, அதனுடைய ஒலி முதலியவற்றைப் பற்றிச் சொல்வது சிட்சை; இது வேதத்துக்கு மூக்கைப் போன்றது. சொற்களின் இலக்கணத்தை ஆராய்வது வியாகரணம்; இது வேதத்துக்கு முகம். செய்யுள் இலக்கணத்தைச் சொல்வது சந்தம்; இது வேதத்தின் தாள். வேதத்தில் சொல்லப் பெற்ற செயல்களைச் செய்யும் காலம் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளக் கோள் நிலை முதலியவற்றைச் சொல்வது சோதிடம்; இது வேதத்தின் கண். வேதச்சொற்களுக்கு நிகண்டுபோலப் பொருள் கூறுவது நிருக்தம்; இது வேதத்தின் செவி. கல்பம் என்பது செயல் முறைகளைத் தெரிவிக்கும் நூல்; இது வேதத்தின் கை. வேதமென்னும் புருஷனுக்கு இப்படி ஆறு அங்கங்கள் உள்ளன.

"கற்பம் கைசந் தம்கால் எண்கண்
தெற்றென் நிருத்தம் செவிசிக்கை மூக்கு
உற்ற வியாக ரணமுகம் பெற்றுச்
சார்பிற் ருேன்ரு ஆரண வாக்கு"

என்று மணிமேகலை (27: 100–03) இந்த ஆறங்கங்களைப் பற்றியும் சொல்லும்.

ஆறு அங்கங்களையும் நன்கு தேர்ந்த அந்தணர்களாகிய முனிவர்களுக்காகப் பலவாகிய வேதங்களை அருளிச் செய்தான் இறைவன். அந்த மறைகள் அரும்பொருள் பல அமைந்து, யாவரும் எளிதிலே அறிவதற்கு அரியவை.

ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்து

என்று புலவர் பாடுகிருர்.

'ஆறு அங்கத்தையும் அறியும் அந்தணர்க்கு, அரியவாகிய வேதங்கள் பலவற்றையும் அருளிச் செய்து' என்று நச்சினுர்கினியர் உரை எழுதினுர்.

இதற்கு வேறு வகையாகவும் பொருள் கொள்ளலாம். வேதத்தை அறிந்து அதன் வாயிலாக மெய்ப்பொருளை உணரும் ஆவலோடு அந்தணராகிய முனிவர் முயன்ருர்கள். வேதப் பொருளை நன்கு தேற உரிய கருவிகளாகிய ஆறு சாஸ்திரங்களையும் நன்ருக அறிந்தார்கள். அப்படி அறிந்தும் வேதத்தின் பல பகுதிகள் அவர்களுக்குப் புலனுகவில்லை, வேதங்களில் தெளிவாகாத அருமறை பல இருந்தன. அவற்றை விளக்கும் ஆசான் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இறுதியில் தென்முகம் நோக்கி எழுந்தருளியிருந்த இறைவனிடம் சென்று தாம் கற்றும் கேட்டும் அறியவொண்ணுமல் இருந்த மறைப் பொருளைத் தெளிந்தனர். ஆகவே, ஆறு அங்கங்களை

நன்கு தேர்ந்த அந்தணருக்கு, தம் அறிவாற்றலால் தெளியப்பெறாத அரிய இரகசியங்கள் பலவற்றைப் பகர்ந்தவன் இறைவன் என்றும் இங்கே பொருள் கொள்ளலாம்.

> "ஒருமுகம், எஞ்சிய பொருளை ஏமுற நாடித்
> திங்கள் போலத் திசைவிளக் கும்மே"

என்பது திருமுருகாற்றுப்படை. 'ஒருமுகம் ஈண்டு வழங்காத வேதங்களிலும் நூல்களிலும் உள்ள பொருள்களை ஆராய்ந்து இருடிகளை ஏமமுறும்படி உணர்த்தித் திங்கள் போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும்' என்று அதற்கு நச்சினார்க்கினியர் பொருள் எழுதியிருக்கிறார்.



இறைவனுடைய திருவிளையாடல்களை நினைக்கப் புகுந்த புலவர் முதலில் அவன் அந்தணர்க்கு அருமறை பல பகர்ந்ததைச் சொல்கிறார். அப்பால் கங்கையைத் தன் சடையில் ஏற்றதைச் சொல்கிறார். பகீரதன் வேண்டக் கங்கையை எம்பெருமான் தன் சடையிலே ஏற்றான். "என்னைத் தாங்குவாரும் உண்டோ?" என்று செருக்குடன் வந்த கங்கையை ஒரு சடையில் ஏற்றான். அது அந்த ஒரு சடையையே நனைக்கப் பற்றாமல் அதனுள் அடங்கி ஒடுங்கியது. கங்கையைத் தன் சடை ஒன்றில் கரந்தருளின அற்புதச் செயலை இறைவன் செய்தான்.

பிறருக்குத் தூய்மையைச் செய்யும் கங்கை செருக்குற்றுத் தூய்மையை இழந்தது. அதைத் தன் சடையிலே கரந்து தூய்மை செய்தான் இறைவன்; பிறகுதான் அது பகீரதனுடைய முன்னோர்களின் என்பின் மேற் பாய்ந்து புனிதமாக்கும் இயல்பு பெற்றது.

"புரிசடைமேற் புனலேற்ற புனிதன் தான்காண்"

என்று திருநாவுக்கரசர் பாடுகிறார். புனிதப் புனல் என்று சொல்லும் கங்கை செருக்கினால் புனிதத்தை இழந்தபோது அதைப் புரிசடைமேல் ஏற்று மீட்டும் அதற்குப் புனிதம் அளித்த புனிதன் அவன்.

"உந்தி அம்புயத் துதித்தவன் உறைதரும் உலகும்
இந்தி ராதியர் உலகமும் நடுக்குற இரைந்து
வந்து தோன்றினன் வரநதி; மலைமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினிற் கரந்தனன் சேர"

என்பது கம்பர் வாக்கு (அகலிகைப் படலம், 55.)

முன்பு தெளிந்திருந்த கங்கை நீரை, இடையிலே புகுந்த செருக்கை மாற்றித் தன் சடையிலே கரந்தவன் சிவபெருமான்.

தேறு நீர் சடைக் கரந்து.

அந்தணருக்கு அருளிய அருட் செயலை முதலில் சொல்லி, அப்பால் கங்கையை ஒறுத்து ஏனையோருக்கு நலம் உண்டாக அருளிய செயலைப் பின்பு சொன்னார் புலவர். பிறகு திரிபுரத்தைத் தீமடுத்த திறலை நினைக்கிறார்.

இரும்பு, வெள்ளி, பொன் என்ற மூன்று மதில் களையுடைய மூன்று நகரங்களை மூன்று அசுரர்கள் ஆண்டனர். அந்த மூன்றும் பறக்கும் நகரங்கள். தாம் நினைத்தபடியெல்லாம் பறந்து சென்று அப்படியே கீழிறங்கி அந்த நகரங்களால் பூமியின் பகுதிகள் நசுக்குண்டு அழியும்படி செய்தும், தேவர்களுக்கு இன்னல் புரிந்தும் அவ்வசுரர்கள் வாழ்ந்தனர். அந்தத் திரிபுரங்களையும்

ஆண்டவன் தன் நகையினுல் எரித்தான். மூன்று மலங்களாகிய பகையை அழிப்பவன் அவன் என்பதை இக் கதை கருதுகிறது என்பார்கள். காரணம், சூக்குமம், தூலம் என்ற மூன்று உடம்புகளேயும் அழித்து முத்தி தருபவன் என்பதை இப்படிக் கதையாகச் சொல்கிறது புராணம் என்றும் சொல்வது உண்டு.

தமக்குக் கிடைத்த வளப்பங்களைக் கொண்டு பிறருக்கே நன்மை செய்கிறவர்கள் தெய்வத்தோடு ஒத்தவர்கள்; தமக்குக் கிடைந்தவற்றைக் கொண்டு தாமும் வாழ்ந்து பிறரும் வாழ வகை செய்கிறவர்கள் மனிதப் பண்பு உடையவர்கள்; அவற்றைக் கொண்டு தாமே வாழவும் பிறர் இன்னலுறவும் வகை செய்வார் அசுரர். அத்தகையவர்களை இறைவன் அருள் அணுகாது. முப்புரம் எரித்த கதை இந்தக் கருத்தையே புலப்படுத்துவதாகவும் கொள்ளலாம். எவ்வாறு கொண்டாலும் சிவபிரான், கூடாத இயல்புகளை அகற்றுபவன் என்பது எல்லாவற்றிற்கும் பொதுவாக நிற்கும். அந்தணருக்கு மறை பகர்ந்தவன் என்றும், நீரைச் சடையிற் கரந்தான் என்றும், திரிபுரம் தீ மடுத்தான் என்றும் நினைக்கவும் பேசவும் அமைந்த இறைவன் உண்மையில் கூருத தன்மையினன்; மனத்தால் குறிக்க இயலாத இயல்பினன். ஆயினும் அவனை மேலே சொன்ன செயலைச் செய்தவனுகவும், கூளிகளால் திகழும் மாருப் போரை உடையவனுகவும், மணிமிடறும் எண் கையும் உடையவனுகவும் அன்பர்கள் கொண்டாடிப் பயன் பெறுகிருர்கள்.

அந்தச் சிவபெருமானை நேர்முகமாக விளித்து, "அடியேன் உள்ளத்தே தோன்றிய வியப்பை விண்ணப்பித்துக் கொள்கிறேன். அதனை இப்போது கேட்டருள வேண்டும்" என்று நவ்வந்துவனுர் தொடங்குகிருர்.

ஆறுஅறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து,
தேறுநீர் சடைக்கரந்து, திரிபுரம் தீமடுத்துக்
கூறுமற் குறித்ததன்மேற் செல்லும் கடுங்கூளி
மாறுப்போர் மணிமிடற்று எண்கையாய் கேள்இனி.

[வேதத்தின் அங்கங்களாகிய ஆறு நூல்களையும் நன்கு அறிந்த அந்தணர்களுக்குத் தெளிவதற்கு அரிய மறைகள் பலவற்றைத் திருவாய் மலர்ந்தருளி, தெளிந்த கங்கை நீரைச் சடையிலே மறைத்தருளி, முப்புரங்களைத் தீயினால் எரித்து, வாக்கினாற் கூறமுடியாமல் மனத்தினால் நினைக்கும் எல்லைக்கு மேலும் போகின்ற தன்மையையுடைய, வேகமாகிய பேய்களால் நிகழும் புறங்கொடாத போரையும் நீல மணிபோன்ற மிடற்றையும் எட்டுக் கையையும் உடைய பெருமானே, அடியேன் வியப்பினால் கூறும் விண்ணப்பத்தை இப்போது கேட்டருள்வாயாக.

ஆறு – ஆறங்கம். அந்தணர் – முனிவர். தேறு - தெளிந்த. கரந்து - மறைத்து. தீ மடுத்து – தீயில் எரியச் செய்து. கூளி - பேய்கள். மாறுப்போர் – பின் வாங்காமல் வெற்றிபெறும் போர். மணி – நீல மணி. மிடறு– கழுத்து. இனி – இப்பொழுது.

பகர்ந்து கரந்து மடுத்துச் செல்லும் பெருமானே கேள் என்று வினைமுடிவு செய்துகொள்ள வேண்டும்.]

தேறு நீர் சடைக்கரந்து என்பதற்கு, 'பகையென்று தெளிகின்ற கங்கையின் வேகத்தைச் சடையில் ஒரு கூற்றிலே அடக்கி' என்று நச்சினார்க்கினியர் உரை எழுதினார்.



புலவருக்கு எதைக்கண்டு வியப்புத் தோன்றியது? அவர் இறைவனுடைய திருக்கூத்தை நினைந்து வியப்

படைகிறார். இறைவனுடைய கூத்தைப் பல நூல்கள் சொல்லுகின்றன. அவனுடைய கூத்து ஒன்றல்ல, இரண்டல்ல; கணக்கில் அடங்காத வகைகள் உண்டு.

அவற்றுள் கொடு கொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்ற மூன்று கூத்துக்களைப் புலவர் வியந்து பாராட்டுகிறார். உலகத்தை யெல்லாம் ஆட்டி வைப்பவன் இறைவன். அவனுடைய நடனமே அவன் செய்யும் தொழில்களை விளக்குவது என்று அறிஞர் சொல்வர். உலகத்தைப் படைத்தலும், காத்தலும், அழித்தலும், மறைத்தலும், அருளுதலும் ஆகிய ஐந்து தொழில்களையும் இறைவன் இயற்றுகிறான். அந்தத் தொழில்கள் மனம் போனபடி நிகழ்வன அல்ல. இறைவனுடைய அருளாணையால் நிகழ்வன. ஆதலின் அவற்றிற்கு ஓர் ஒழுங்கு உண்டு. அந்த ஒழுங்குக்குள் நின்றே சூரியன் தோன்றுகிறான், மறைகிறான்; சந்திரன் தேய்கிறான், வளர்கிறான்; காற்று வெம்மையாகவும் தண்மையாகவும் வீசுகிறது; வேப்ப மரத்தில் வேப்பிலையே தளிர்க்கிறது; யானை யானையையே பெறுகிறது. கடல் கரைகடவாமையும் உயிர் உடம்பில் வரையறுத்த காலம் வரையில் தங்குவதும் ஆகிய செயல்கள் யாவும் அந்த ஒழுங்கின்படியே நிகழ்கின்றன. நடனம் என்பது உடம்பில் நிகழும் செயல்கள் அனைத்தும் ஒழுங்குக்கு உட்பட்டு அமைவது. அந்த ஒழுங்குக்குத் தாளம் அல்லது லயம் என்று பெயர். கையின் அசைவு, காலால் மிதிக்கும் ஜதி, கண்ணின் பார்வை, உடம்பின் நெளிவு, வாயில் வரும் பாட்டு இத்தனையும் ஒரு தாளக் கட்டுப் பாட்டைச் சார்ந்தே அமையும். இறைவன் இயற்றிய பிரபஞ்சம் முழுவதும் அவனது அருளாணையாகிய லயத்தைச் சார்ந்தே இயங்குகிறது. ஆகவே அவன் செயல் எல்லாவற்றிலும் ஒழுங்கு உண்டு; லயம் உண்டு. அதனால் அந்தச் செயல்களையே கூத்தாக வைத்து அதனை நினைந்து பாராட்டி வழிபடக் கூத்தப்பிரானாக அவனை உருவகம்

செய்தார்கள். அவன் அருளே கண்ணுகக் காட்ட, நடராசனுகவே கண்டு களித்தார்கள், அருளில் மூழ்கிய பெரியோர்கள்.

இந்தக் கூத்தின் இயல்பை நினைக்க நினைக்க இன்பம் பொங்குகிறது. இறைவனுடைய தத்துவத்தை உட்கருத்தாக வைத்துக் காட்டிய கூத்துக் கோலத்தின் கலையழகே இன்று உலகம் முழுவதும் போற்றும் வகையில் இருக்கிறது. வேறு எந்த நாட்டிலும் நடராச விக்கிரகத்தைக் காண முடியாது. தமிழ் நாட்டின் தனிச் சொத்து அது. சைவர்களுக்கு எத்தனையோ கோயில்கள் இருந்தாலும் அவற்றிற்குள் தலைமையுள்ளதாகவும், கோயில் என்று அடையின்றிச் சொன்னுலே தெரிந்து கொள்ளும் தலமாகவும் இருப்பது சிதம்பரம். அதற்குக் காரணம் அங்கே திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமானுடைய சிறப்பே யாகும்

கலைவகையில் கண்டுகளிப்பது நடராசன் திருவுருவம்; இடம், காலம், சாதி, சமயம் என்ற வரையறை யாதும் இல்லாமல் நடராசப் பெருமானுடைய ஆடல் திருக்கோலத்தைக் கலைப்பொருளாக மக்கள் கண்டு களிக்கலாம். சிற்பக் கலையும், நடனக் கலையும் அந்தத் திருவுருவத்தில் உன்னத நிலையை அடைந்திருக்கின்றன. மந்திர சாத்திரக் கருத்துக்களின் அடையாளமாக அந்தத் திருக்கோலத்துக்குப் பொருள் விரிக்கிறவர்கள் உண்டு. யோக நூலின்படி நடராசத் திருவுருவத்துக்கு உள்ளுறை கூறுவாரும் உண்டு. ஞான நூல்களின்படி அந்த மூர்த்தியின் உண்மையை விரிப்பவர்களும் உண்டு. புராணங்களைக் கொண்டு கதை சொல்லி அதன் சிறப்பை எடுத்துக் கூறுவாரும் உண்டு.

இறைவன் உலகத்தைப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள் செய்யும் தொழிலுடையவன். இதனை உட்கருத்தாகக் கொண்ட நடனத்தை ஐந்தொழிற் கூத்து

அல்லது பஞ்சகிருத்திய நடனம் என்பார்கள். உலகமும் உயிரும் இயங்குகின்றன; அவன் தானே இயங்கி அவற்றை இயக்குகிறான்; அவ்வாறு இயக்குவதற்குக் காரணம் உயிர்களிடம் அவனுக்கு உள்ள கருணையே. அவன் உள்ளத்திலே கருணை சுரக்கிறது; அதனால் அவன் ஆடுகிறான்; அந்த ஆட்டத்தால் உலகை ஆட்டுகிறான். உலகம் ஆடுவதற்கு அவன் ஆட்டம் காரணம். அவன் ஆட்டத்துக்கு அவன் அருளாணை காரணம். அந்த அருளே எல்லா ஆட்டத்திலும் ஓர் ஒழுங்கை, வரையறையை, லயத்தை, தாளத்தை அமைத்திருக்கிறது.

இந்தத் தத்துவத்தை உருவாக்கி வைத்திருக்கிறார்கள். இறைவன் ஆடுகிறான். அதற்கு உமாதேவி தாளம் கொட்டுகிறாள். உமாதேவியாகிய சக்தி இறைவனுடைய அருள். அந்த அருளையே சக்தியென்று உருவமைத்து வழிபடுகிறோம். இறைவன்பால் உள்ள ஆற்றல் அருள்; அந்த அருளின் தூண்டுதலால்தான் அவன் எத்தொழிலையும் செய்கிறான். இதையே சக்தி தாளம் கொட்ட இறைவன் ஆடுகிறான் என்று சொன்னார்கள்.*

நவ்வந்துவனார் பாராட்டும் நடனங்களாகிய கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்ற மூன்றிற்கும் உடன் இருந்து தாளம் போடுகிறாள் அம்மை. இனி அவர் கூறும் கூத்துக்களை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

☆

* 'சாந்தோக்கிய உபநிஷத்தில் தேவியார் ஆடலாசிரியனாயிருந்து தாளம் தட்டப் பரமசிவன் நிருத்தம் செய்தனனென்று கூறியிருத்தல் காண்க.' —பரதசேனாபதீயம்.

ஓங்குபுகழ் ஈசன் உயர்விதமாய்க் கொண்டாடப்
பாங்கின்இசை நாரதனார் பாடுதலும்—பூங்குழலாள்
பாணி இயற்றினாள் என்றான் பனிவரையில்
வீணை இயற்றிய வேந்து.—சுத்தானந்தப் பிரகாசம்.

சிவபெருமான் ஆடிய கூத்துக்களில் கொடு கொட்டி என்பது ஒன்று. எந்தக் கூத்தும் ஆனந்த மிகுதியால் நிகழ்வது. இறைவனுக்கு இன்பம் துன்பம் என்ற வேறு பாடு இல்லை. ஆயினும் உயிர்க் கூட்டத்திற்கு இன்பம் தரும் செயல் செய்தால் அவனுக்கு இன்பமேயாம். உயிர் கள் தம்முடைய வினைக்கு ஈடாகப் பல பல பிறவிகளைப் பெற்று வாழ்ந்து இறக்கின்றன. மீட்டும் மீட்டும் பிறந் தும் வாழ்ந்தும் மடிந்தும் வினைப்பயனை நுகர்வது உயிர் களின் இடைவிடாத தொழிலாக இருக்கிறது. கடலில் ஓய்வின்றி அலைகள் அடித்துக் கொண்டே இருக்கின்றன; உயிர்கள் பிறவியாகிய கடலில் அகப்பட்டு இன்ப துன்பங் களாகிய அலைகளினூடே உழல்கின்றன. இது ஓயாத உத்தியோகம்; ஒழியாத வேலை.

உயிர்கள் இவ்வாறு அல்லற்பட்டு உழல்வதற்கு அவர் களுக்குச் சிறிதேனும் ஓய்வு வேண்டாமா? ஒவ்வொரு நாளும் நாம் உழைக்கிறோம்; அதனால் இளைப்பு உண்டா கிறது. அந்த இளைப்பைப் போக்கிக் கொள்ள ஒவ்வொரு நாளும் உறங்குகிறோம். ஒரு நாள் உழைப்பினால் வந்த இளைப்பைப் போக்கிக் கொள்ள அன்றைய இரவிலே ஓய்வு கிடைக்கிறது. அப்படியே ஒரு பிறவியின் இளைப்பை மாற்றிக் கொள்ள அந்தப் பிறவியிலிருந்து விடுதலை மரணம் என்ற உருவத்தில் கிடைக்கிறது.

“உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு”

என்று திருவள்ளுவர் சொல்கிறார்.

இறப்பு என்பது தனித்தனி உயிருக்குத் தனித் தனியே நிகழ்கிறது. ஆனால் உறக்கம் என்பது எல்லோரி டத்தும் ஒன்றாக நிகழ்கிறது. இரவு எல்லாருக்கும் பொது வாகத்தானே வருகிறது? அதுபோல எல்லா உயிர்களுக்கும்

பொதுவான இறப்பு அல்லது ஓய்வு வேண்டாமா? அப்படி ஓர் ஓய்வு உண்டு; அதற்குப் பிரளயம் என்று பெயர். அந்தப் பிரளயத்தில் சில வகை உண்டு. உலகம் முழுகும் பிரளயம், கடல் அழியும் பிரளயம், காற்று இல்லையாகும் பிரளயம், தீயும் மறையும் பிரளயம், ஆகாசங்கூட இல்லாத பிரளயம் என்று வரவரப் பெரியனவாக அமைந்த பிரளயங்கள் உண்டு. வாரக் கடைசியில் ஒருநாள் ஓய்வு, மாசத்தின் இறுதிவாரத்துக்கு முன் வாரத்தில் இரண்டு நாள் ஓய்வு, வருஷத்தில் ஒரு சமயம் சேர்ந்தாற்போல் ஒரு வாரம் ஒரு மாதம் ஓய்வு என்று மாணுக்கருக்கும் பிறருக்கும் ஓய்வு இருப்பதுபோல, இந்தப் பிரளய ஓய்வுகளும் சின்னது பெரியது என்று அடுக்கடுக்காக இருக்கும். அதன் விரிவைப்பற்றி இப்போது அதிகமாகக் கவலைப்பட வேண்டாம்.

எல்லாப் பூதங்களும் உயிர்களும் தேவர்களும் ஒடுங்கி ஓய்வு கொள்ளும் காலத்தை மகாப் பிரளயம் என்று சொல்வார்கள். அந்தக் காலத்தில் இறைவன் ஒருவன்தான் இருப்பான். பகலெல்லாம் நோயின் கடுமை தாங்காமல் வருந்திய குழந்தைகளை வைத்துக் காப்பாற்றிய தாய் இரவில் அவை தூங்கும்பொழுது எவ்வளவு இன்பத்தை அடைகிறுள்! 'பாவம்! பகல் முழுவதும் ஒரு கணமும் அமைதி பெருமல் தவித்தன; இப்போதுதான் தூங்குகின்றன' என்ற ஆறுதலுடன், பின்னும் நன்றுகத் தூங்கட்டும் என்று தாலாட்டுப் பாடுகிறுள். இறைவனும் மகாப் பிரளய காலத்தில் உயிர்களையெல்லாம் தன்னிடத்தே அடக்கிக்கொண்டு, அவர்களுக்கு ஓய்வு கிடைத்ததே என்ற ஆனந்தத்தால் கூத்தாடுகிறுனும். முன்னுலே எல்லா உயிர்களையும் ஒரு முறையாகத் தன்னிடத்திலிருந்து புறப்பட விட்டான் இறைவன். இப்போது அந்த முறைப்படியே மீட்டும் அடக்கிக் கொண்டான். தேவர், மக்கள், பிற விலங்குகள், பூதம் என்று பல உருவங்களாக ஓடியாடித் தொழில் செய்து திரிந்த உயிர்க் கூட்டங்களைப்

பெயர்த்துத் தன்னிடம் மீட்டுக்கொண்டு, எல்லாக் குழந்தைகளும் ஒரு சமயத்தில் தன் அருகில் இருக்கும் போது களிக்கும் தாய்போலக் களிப்படைகிறான். ஆளுக்கு ஓர் ஊரில் அலுவல் பார்க்கிற பல பிள்ளைகள் பல காலத் துக்குப்பின் ஏதோ ஒரு காரணமாகத் தாய் தகப்பன் இருக்கும் இடத்திலே வந்து ஒன்று கூடினால் அவர்களுக்கு இன்பம் உண்டாவது இயல்புதானே?

இங்கேகூடப் பல உயிர்களுக்கும் தந்தையாகிய இறைவனும், தாயாகிய தேவியும் இருக்கிறார்கள். இரண்டு பேருமே ஆனந்தம் அடைகிறார்கள். இறைவன் ஆடிக் களிக்கிறான்; இறைவி அவனுடைய இடப்பாகத்தே ஒன்றியிருந்து தாளம் கொட்டிக் களிப்பை அடைகிறாள்.

இறைவன் உயிர்களையெல்லாம் பேரூழிக் காலத் தில் தன்னிடம் அடக்கிக் கொண்டு ஆடும் கூத்துக்குக் கொடுகொட்டி என்று பெயர். அவன் ஆனந்தத்தால் கைகொட்டி ஆடுகிறான். அதனால் கொட்டி என்ற பெயர் வந்தது. உயிர்கள் அழிந்த காலம் அது என்ற நினைவை வைத்துப் பார்த்தால் அது கொடுமையாகத் தோற்றுகிறது. அதனால் கொடு கொட்டி* என்ற பெயர் அமைந்தது. கொட்டிச் சேதம் என்றும் சொல்வது உண்டு.

கொடுகொட்டி ஆடும்போது இறைவன் தன் கையில் உள்ள துடியை முழக்குகிறான். அந்த உடுக்கை பலவேறு ஒலிகளை எழுப்புகிறது. இறைவன் குதித்தும் சுழன்றும் பாய்ந்தும் ஆடும் ஆட்டங்களுக்கு ஏற்ப வெவ்வேறு ஒலி களை அந்தத் துடியாகிய பறை இயம்புகிறது. அவனுடன் ஒரு கூற்றிலேயிருந்து கொடிபோலத் துவண்ட இடையை யுடைய அம்மை தாளம் கொட்டுகிறாள்.

---

* 'கொடுங் கொட்டி, கொடு கொட்டி என விகார மாயிற்று. கொடுங்கொட்டி யென்றார், எல்லாவற்றை யும் அழித்து நின்று ஆடுதலின்' என்பர் நச்சினார்க்கினியர்.

அவன் எல்லா உயிர்களையும் தன்பால் அடக்கிக் கொண்ட காலத்தில் யார் இருந்து பார்த்தார்கள்? இப்படி ஆடுவதாகக் கற்பனை செய்து, அதனுடைய தத்துவத்திலே உள்ளத்தை ஈடுபடுத்தி, இறைவனுடையகருணையை நினைந்து உருகுதல் அருள் நிரம்பிய ஆன்றோர் செயல். இறைவன் கொடு கொட்டி ஆடுகையில் அந்தக் கூத்துக்குச் சாட்சியாக ஒருவர் உண்டு. இறைவனுடைய அருளே உருவமாகிய இறைவி அவனுடன் பிரிவின்றி இருப்பாள். அப்பெருமாட்டி தாளம் போடுவாள். அவளையன்றி மற்ற எல்லா உயிர்களும் அடங்கியிருக்கின்றனவே! "பல உருவங்களையும் பெயர்த்து, அந்த மகாப் பிரளய காலத்திலே கையிலுள்ள துடியாகிய படுகின்ற (ஒலிக்கின்ற) பறை இயம்ப நீ ஆடுவாயே; அப்போது கொடி போன்ற நுசுப்பை உடைய இறைவிதானே தாளம்கொட்டுவாள்? வேறு யார் அங்கே அப்போது இருக்க முடியும்?" என்று நவ்வந்துவனார் வியப்பு மீதூரக் கேட்கிறார்.

படு பறை பல இயம்பப் பல் உருவம் பெயர்த்து நீ
கொடுகொட்டி ஆடுங்கால் கோடு உயர் அகல் அல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்ட சீர் தருவாளோ?

[ஒலிக்கின்ற துடியாகிய பறை பல வகை ஒலிகளை ஒலிக்க, வெவ்வேறு உருவமாக இருந்த உயிர்க் கூட்டங்களை அவற்றின் வெவ்வேறு போக்கிலிருந்து மீட்டு நின்பால் அடக்கிக்கொண்டு, கொடு கொட்டி என்ற கூத்தை ஆடும் போது, பக்கங்கள் உயர்ந்தும் அகன்றும் இருக்கும் பெண் உறுப்பையும், கொடிபோன்ற இடையையும் உடைய இறைவி, அந்த ஆட்டத்துக்கு ஏற்றதாக மேற்கொண்ட சீர் என்ற தாளத்தைத் தருவாளோ? அங்கே யார் இருக்க முடியும்?

படுதல்-ஒலித்தல். இயம்ப-முழங்க. பெயர்த்து-ஒரு கால் வெளிப்படுத்திப் பின்பு மீட்டுக்கொண்டு. கோடு-

பக்கம். புரை—ஒத்த. நுசுப்பு—இடை. சீர்-தாளத்தின் இறுதிப் பகுதி.]

★

கொடுகொட்டி என்ற கூத்தைப் பற்றி வேறு நூல்களும் சொல்கின்றன. இறைவன் முப்புரங்களையும் எரித்தபொழுது ஆடியது அது என்று சிலப்பதிகாரம் சொல்கிறது.*

" பாரதி ஆடிய பாரதி அரங்கத்துத்
திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்.
(சிலப்பதிகாரம், 6:39—43)

'தேவர் புரம் எரிய வேண்டுதலால் வடவை எரியைத் தலையிலேயுடைய பெரிய அம்பு ஏவல் கேட்ட அளவிலே அப்புரத்தில் அவுணர் வெந்து விழுந்த வெண்பலிக் குவையாகிய பாரதி அரங்கத்திலே § உமையவள் ஒரு கூற்றினளாய் நின்று பாணி தூக்குச் சீரென்னும் தாளங்களைச் செலுத்தத் தேவர் யாவரினும் உயர்ந்த இறைவன் சயானந்தத்தாற் கைகொட்டி நின்று ஆடிய கொடு கொட்டியென்னும் ஆடலும்'

என்று அடியார்க்கு நல்லார் இதற்கு உரை எழுதுகிறார்.

---

* கொட்டி யென்பது அசுரர் நிமித்தமாக இயற்றியதென்றும், திரிபுர தாண்டவம் என்னும் பெயர் பெறுமென்றும் பரதசேனுபதீயம் என்னும் நூல் கூறும்.

§ பாரதி அரங்கம்—கொற்றவையின் அரங்கமாகிய சுடுகாடு.

கலித்தொகையின் உரையிலே நச்சினார்க்கினியர் கொடுகொட்டியின் இலக்கணத்தைச் சொல்லும் பழைய சூத்திரம் ஒன்றை மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார். அது வருமாறு:

" கொட்டி யாடல் தோற்றம் ஒட்டிய
உமையவள் ஒருபால் ஆக, ஒருபால்
இமையா நாட்டத்து இறைவன் ஆகி,
அமையா உட்கும் வியப்பும் விழைவும்
பொலிவும் பொருந்த நோக்கித் தொக்க
அவுணர் இன்னுயிர் இழப்ப, அக்களம்
பொலிய ஆடினன் என்ப; மற்றதன்
விருத்தம் காத்தற் பொருளொடு கூடிப்
பொருத்த வரூஉம்; பொருந்திய பாடல்
திருத்தகு மரபில் தெய்வத் துதிப்பே.

'இறைவனைத் துதிக்கப் பயன்படும் பாடல்களில் இந்தக் கொடு கொட்டி ஆடலைச் சொல்வது மரபு. இது உலகில் உள்ள உயிர்களைக் காத்தற் பொருட்டுச் சிவ பெருமான் நிகழ்த்தியது. உமாதேவியார் ஒருபால் இருப்ப அசுரர்களை மாய்த்து, அவர்கள் மாய்ந்த போர்க்களத் திலே இறைவன் ஆடியது' என்ற செய்திகளை இந்தச் சூத்திரம் புலப்படுத்துகிறது.

தெய்வங்கள் ஆடிய ஆடல் பதினொன்று. அவற்றில் சிவபிரான் ஆடிய கூத்துக்கள் இரண்டு. அவற்றில் ஒன்று கொடுகொட்டி.*

இறைவன் ஆடிய கொடுகொட்டி என்னும் கூத்தைக் கூத்துக்கலை வல்லவர்கள் அரசவையில் ஆடி மன்னரை

*"கொட்டி கொடுவிடையோன் ஆடிற் றதற்குறுப்பு, ஒட்டிய நான்காம் எனல்."—சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் காட்டிய மேற்கோள்.

மகிழ்வுறச் செய்வது பழைய வழக்கம் என்று தெரிகிறது. செங்குட்டுவன் தன் பெருந்தேவியுடன் வீற்றிருந்தபோது பறையூரிலிருந்து வந்த கூத்தச் சாக்கையன் என்பவன் இறைவன் ஆடிய கொடுகொட்டிக் கூத்தை ஆடினன் என்று சிலப்பதிகாரம் சொல்கிறது.

" திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப்பு அருளவும்
செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்,
பாடகம் பதையாது சூடகம் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார்குழை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒருதிறன் ஆக, ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கையன் ஆடலின், மகிழ்ந்து.

(நடுகற் காதை, 67–77.)

இறைவன் ஆடும்போது அவனது ஒரு பாகத்தில் அமர்ந்த இறைவி அசையாமல் இருந்தாள் என்ற செய்தி இதனால் தெரியவருகிறது.



ஆடும் பெருமானுடைய கொடு கொட்டியாடலைப் பற்றிப் பாடிய நவ்வந்துவனார் அடுத்த படியாகப் பாண்டரங்கம் என்ற கூத்தைப் பற்றிச் சொல்கிறார். இறைவன் திரிபுர தகனம் செய்தபோது, உயிர்க் கூட்டத்துக்கு இன்னல் விளைவித்த புரங்கள் ஒழிந்தன என்ற மகிழ்ச்சியால் ஆடியது பாண்டரங்கக் கூத்து. அப்பொழுதும் இறைவி உடன் இருந்து தாளம் கொட்டினள்.

மண்டிய அமரில் வெற்றிபெற்ற பெருமான் ஆதலின் அந்த வெற்றியினால் ஆடுகிறான். நேர் நின்று முறையாகப் போர் செய்து வெல்வதைக் கடத்தல் என்று சொல்வது சங்கத் தமிழ் மரபு. 'வஞ்சியாது எதிர் நின்று கொன்று' என்று உரை எழுதுவார்கள் பழைய உரையாசிரியர்கள். இறைவன் திரிபுரத்தை வென்றது நேர்மையான முறையால். குற்றவாளிகளைத் தண்டிக்கும் முறையில் போர் செய்து அசுரர்களை அழித்தல் தெய்வங்களுக்கு இயல்பு. இறைவன் திரிபுரத்தை அழித்தாலும் அவனுடைய கருணை அங்கும் சிறந்து நின்றது. திரிபுரங்களை அழித்தானே யன்றி அவற்றின் தலைவர்களாகிய மூன்று அசுரர்களையும் அழிக்கவில்லை. அவர்கள் மனம் திருந்தி வழிபட்டமையால் இருவரை வாயில் காவலராகவும், ஒருவனை முழா முழக்குபவனாகவும் கொண்டான். ஒருவனுடைய நோயை மாத்திரம் போக்கி அவனுக்கு இன்பந்தரும் மருத்துவன் செய்கையை ஒத்தது இது.

அந்த மூன்று அசுரர்களும் பல வகையில் போர் செய்தார்கள். அந்த அமர் பலவற்றையும் கடந்தான் இறைவன். திரிபுரம் நீறாயின. இறைவன் வலிமை மிக்கவனாக நின்றான். அப்போது அந்தக் களம் எங்கும் நீறாக, வெள்ளை வெளேரென்று இருந்தது. கறுப்பு நிறம் அழுக்குக்கும் அறியாமைக்கும் பாவத்துக்கும் அறிகுறி. வெண்மை தூய்மைக்கும் ஞானத்துக்கும் புண்ணியத்துக்கும் அடையாளம். திரிபுரங்களாகிய தீங்குருவமான கருவிகளைக் கொண்டு அசுரர் மூவரும் தருக்கித் திரிந்தனர். மூன்று புரங்களும் அழிந்தன; மும்மலம் ஒழிந்தன; முக்குணங்கள் வெந்தன. மலமழிந்த, குணமழிந்த நிலை ஞானநிலை. அது தூய வெண்ணிறமானது. மும்மலம் ஒழிந்த இடத்திலே, முக்குணம் கழிந்த வெளியிலே, இறைவன் தாண்டவம் புரிவான். இங்கே திரிபுரத் தலைவர் செய்த பல போர்களில் வென்று, வெற்றியோடு நின்று, அந்த வெள்ளிய அரங்கத்திலே அங்குள்ள வெண்ணீற்றை உடம்பெல்லாம் பூசிக்

கொண்டு ஆண்டவன் பாண்டரங்கம் ஆடினான். பாண்டு என்பது வெண்மைக்குப் பெயர். அரங்கம் என்பது கூத்தாடும் இடம். திரிபுரம் வெந்தவிய எங்கும் நீற்றுமயமாகி வெண்ணிறம் பெற்ற இடத்தையே அரங்கமாகக் கொண்டு இறைவன் ஆடியதால், அதற்குப் பாண்டரங்கம் என்ற பெயர் வந்தது.

இவ்வாறு, மண்டிய அமர் பலவற்றை வென்று, அந்த வலிமையால் நீற்றை அணிந்து பாண்டரங்கக் கூத்தை ஆடியபோதும், உடன் இருந்து தாளம் கொட்டினாள் அம்மை. மூங்கிலைப்போல வழுவழுப்பும் பசுமையும் உடைய தோளுடையவள் எம்பிராட்டி; அணைபோல மெத்தென்றிருக்கும் தோள் அது. அவள் கூந்தலில் வண்டுகள் ஒலித்துக் கொண்டிருக்கும். அவள் தூக்கு என்னும் தாளத்தைக் கொட்டினாள்.

நல்வந்துவனார் இறைவனைப் பார்த்தே சொல்கிறார்; "இறைவா, மண்டு அமர் பல கடந்து, வலிமையால் நீற்றை அணிந்து பாண்டரங்கக் கூத்தை ஆடியபோது யார் உனக்குத் தாளங்கொட்டினார்கள்? உன் கூத்தின் திறம் அறிந்த தேவிதானே கொட்டமுடியும்? பணை (மூங்கில்) போன்ற எழிலையும், அணை (தலையணை) போன்ற மென்மையையும் உடையவள், வண்டு அரற்றும் கூந்தலை உடையவள் ஆகிய பிராட்டிதானே தாளம் போடுவாள்? வேறு யாரால் முடியும்?"

மண்டு அமர் பல கடந்து மதுகையால் நீறு அணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணை எழில் அணை மென்றோள்
வண்டுஅரற்றும் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ?

[மேற்சென்று நெருங்கும் பலவகைப் போரை வென்று அந்த வலிமையினால் நீற்றை அணிந்து, பாண்டரங்கம் என்னும் கூத்தை நீ ஆடும்போது, மூங்கிலைப்போன்ற

அழகும் தலையணையைப்போன்ற மென்மையும் உள்ள தோளையும் வண்டுகள் முரலும் கூந்தலையும் உடைய உமாதேவி வளருகின்ற தூக்கு என்னும் தாளவகையைத் தருவாளோ?

மண்டுதல் – நெருங்குதல். அமர் – போர். கடந்து – வென்று. மதுகை – வலிமை. பண்டரங்கம் – பாண்டரங்கக் கூத்து; பாட்டில் எதுகை நோக்கி முதல் எழுத்துக் குறுகி நின்றது. பணை – மூங்கில். அணை – படுக்கை, தலையணை. அரற்றும் – ஒலிக்கும். தூக்கு – தளத்தின் இடைப் பகுதி.]



பாண்டரங்கம் என்ற கூத்தும் தெய்வங்களுக்குரிய பதிேனாராடல்களில் ஒன்று.* இறைவன் திரிபுர சங்காரம் செய்த பிறகு பைரவியின் வேடம் பூண்டு, பூமியைத் தேராகக்கொண்டு நான்மறையைப் புரவியாகப் பூட்டி அவற்றை ஓட்டிய பிரமனாகிய சாரதி காண வெண்ணீற்றை அணிந்து ஆடியதென்று சிலப்பதிகாரம் கூறும்.

"தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி ஆடிய வியன்பாண்டரங்கமும்.

(சிலப்பதிகாரம். 6:44-5.)

'வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரி பூட்டி நெடும்புறம் மறைத்து வார்துகில் முடித்துக் கூர்முட் பிடித்துத் தேர்முன் நின்ற திசைமுகன் காணும்படி பாரதி வடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந்து ஆடிய

*"பாண்டரங்கம் முக்கணான் ஆடிற் றதற்குறுப்பு, ஆய்ந்தன ஆறும் எனல்"—சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் காட்டிய மேற்கோள். இது தெய்வவிருத்தி என்ற கூத்து வகையுள் ஒன்று.

பாண்டரங்கக் கூத்தும்' என்பது அடியார்க்கு நல்லார் எழுதிய உரை.

நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டும் சூத்திரம் வருமாறு:

"ஏறமர் கடவுள் மூவெயில் எய்வுழிக்
கூறுகூ றாகக் கொடியொடும் படையொடும்
வேறுவே றுருவின் விண்மிசைப் பரந்தனர்;
அவ்வழி ஒளியொடும் உருவொடும் தோன்றித்
தேர்முன் நின்று திசைதலை பணிப்பச்
சுவையும் குறிப்பும் ஒழிவில தோன்றி
அவையவை அவ்வழி ஆடினன்; ஆட
மைந்தரும் மகளிரும் தந்தம்நிலை அழிய
மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்
கடிய காலக் காற்றென வேற்றவன்?
படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே.

இறைவன் இந்தக் கூத்தை ஆடியபொழுது கண்ட மைந்தரும் மகளிரும் தம்மை மறந்து பரவசப்பட்டனர் என்ற செய்தி இதனால் தெரிய வருகிறது.



கொடுகொட்டி, பாண்டரங்கம் என்ற இரண்டு கூத்தைப் பாராட்டிய புலவர் மூன்றாவது கூத்து ஒன்றைப் பற்றியும் சொல்கிறார். அந்தக் கூத்தின் பெயர் காபாலம் என்பது. கையிலே பிரமனுடைய கபாலத்தை ஏந்திஆடிய தனால் அதற்குக் காபாலம் என்ற பெயர் வந்தது.

* பரதசேனாபதீயம் என்ற பிற்கால நூல், பாண்டரங்கக்கூத்து உலகோற்பத்தி நிமித்தமாக இறைவன் ஆடிய தென்றும், ஆனந்தத் தாண்டவம் என்ற பெயரை உடைய தென்றும் சொல்கிறது (பக்கம், 3.)

துடி முழங்கக் கொடுகொட்டி ஆடினதையும், நீறணிந்து பாண்டரங்கம் ஆடியதையும் சொன்ன புலவர் இப்போது காபாலக் கோலத்தை வருணிக்கிறார்.

இறைவன் செருக்குடையவருக்கு அருள் செய்யாதவன். செருக்குடையவர்களுக்கு அவன் தன்மை விளங்காது. செருக்கு, பணத்தால் வரலாம்; பதவியால் வரலாம்; படிப்பால் வரலாம்; தவத்தால்கூட வரலாம். செருக்குக்குக் காரணம் எதுவானாலும் செருக்குச் செருக்குத்தான். கட்டை குத்தினாலும், முள் குத்தினாலும், ஆணி குத்தினாலும் புண் புண்தானே? 'இவன் படித்தவன்; அதனால் இவனுக்குச் செருக்கு இருப்பது அழகுதான்' என்று சொல்லவொண்ணாது. 'இது பொன்னாலான ஆணிதான்; ஆகையால் இதனால் வந்த புண் பூண்பதற்குரியது' என்று யாராவது சொல்வார்களா?

தாருகாவனத்தில் பல முனிவர்கள் இருந்தார்கள். அவர்கள் வேள்வித் துறையில் தலைசிறந்தவர்கள்; விரதம் இருந்து தவம் புரிந்தவர்கள். ஆனாலும் அவர்களுக்கு 'நாம்' என்ற செருக்கு இருந்தது. தவம் வளர வளர, வேள்வி மல்க மல்க, அந்தச் செருக்கு வளர்ந்தது, அதைப் போக்க இறைவன் வந்தான். அவன் பெருமையை அறியாது, தங்கள் பகைவன் என்று கருதித் தீய வேள்விகளைச் செய்து பல பொருள்களை உண்டாக்கி அவன்மேல் விடுத்தார்கள். அவனை அவை அழித்துவிடும் என்ற எண்ணம் அவர்களுக்கு. இறைவன் அவற்றையெல்லாம் பிடித்து வைத்துக் கொண்டான். செருக்கு அடையவர்களுக்கு என்ன கதி நேரும் என்பதை மற்றவர்கள் தெரிந்து கொள்ளட்டுமென்று அவற்றை அடையாளமாக வைத்துக் கொண்டான். அவர்கள் பாம்பை அனுப்பினார்கள்; அதைப் பிடித்து அணியாக அணிந்து கொண்டான். புலியை விடுத்தார்கள். கொலை செய்ய வேண்டுமென்று வந்த உழுவை அது. அதனை உரித்து அதன் தோலை இடையிலே கட்டிக் கொண்டான்; தோலாண்டியானான்.

இடையிலே பிறர் செருக்கை அடக்கியதைத் காட்டும் புலித்தோல் இருக்கிறது. அவன் கழுத்தில் அழகான கொன்றை மாலை புரள்கிறது. சிவபிரானுக்கு உரிய அடையாள மாலை அது; மங்கல நிறமான மஞ்சள் நிறமுடையது; மென்மையான மணமுடையது.

பதவியினாலே உண்டாகும் செருக்கையும் அடக்கு பவன் இறைவன் என்பதை அப்பெருமான் கையிலுள்ள கபாலம் காட்டுகிறது. படைப்புத் தொழிலைச் செய்த பிரமனுக்கு முன்பு ஐந்து தலைகள் இருந்தன. 'நமக்கும் ஐந்து தலை; சிவனுக்கும் ஐந்து தலை. நாம் செய்வது முதல் தொழில். ஆகவே நாம் மிகப் பெரியோம்' என்று அவன் தலை தருக்கினான். இறைவன் அந்தத் தருக்குக்குக் காரணமாகிய தலையை மாத்திரம் கிள்ளிக் கையில் வைத்துக்கொண்டான். அது காய்ந்து போக, கபாலத்தை மாத்திரம் ஏந்திக் கொண்டான்.

இறைவன் கபாலத்தை ஏந்தியிருப்பது, செருக்கை அடக்குபவன் அவன் என்பதைக் காட்டுவதோடு, அக் கபாலம் வேறு பல உண்மைகளையும் காட்டும் அறிகுறி யாக நிலவுகிறது. பிரமனைப் படைப்புக் கடவுள் என்று சொல்கிறோம். உயிர்களைப் பிறக்கும்படி செய்கிறவன் அவன். பிறப்புக்கு மூலம் எதுவோ அதற்கு அடையாளம் பிரமன். அவன் செருக்கை அடக்கின அருட் செயல், சிவபிரான் பிறப்புக்கு மூலமான ஆணவத்தை அழித்து முத்தி தருபவன் என்பதை விளக்குகிறது. தலையில் எழுதுகிற பிரமனுடைய தலையையே குப்புறச் செய்தவன் இறைவன்; கபாலத்தைக் கையில் ஏந்தும்போது படைப்புப் பகுதி கீழ் நோக்கித்தானே இருக்கும்?

அவன் பிரம கபாலத்தை ஏந்தி அன்புப் பிச்சை கேட்கிறான். 'இதைப் பார்; பிறப்பைப் போக்குபவன் நான். உன் அன்பைத் தா' என்று உணர்வூட்டி அன்பு

செய்யச் செய்கிறான். செல்வங்களுக்கெல்லாம் தலைவனாகிய அப்பெருமான் எல்லாச் செல்வத்தையும் பிறருக்கு வழங்கிவிட்டுத் தான் அன்புப் பிச்சை கேட்கிறான். நமக்கு அருளை வழங்கும் பொருட்டுப் பிச்சை கேட்பது போல வருகிறான். தன் கையில் பொன்னை உடையவன் ஒருவன், 'அப்பா, என் பாரத்தை இறக்கி எடுத்துக் கொண்டு எனக்கு ஓய்வு கொடேன்' என்று சொல்வது போல இருக்கிறது அவன் செயல். கையிலே கபாலம் ஏந்திய இறைவனை நினைக்கும்போது இத்தனை உள்ளுறையும் நினைவுக்கு வருகின்றன.

புலித்தோலை இடையிலே கட்டி, கொன்றைமாலை புரள, பிரம கபாலத்தைக் கையிலே ஏந்திக்கொண்டு இறைவன் காபாலக் கூத்தை ஆடினான். அங்கும் அவனுக்குத் தாளம்போட அம்மையையன்றி வேறு யார் இருக்க முடியும்? இறைவனுடைய விநோதமான நிலையைக் கண்டு எம்பெருமாட்டி புன்னகை பூக்கிறாள். பட்டையும் பீதாம்பரத்தையும் பிறர் அணிய, இப்பெருமான் புலித்தோலை அணிந்திருக்கிறான். வேறுபல மலர்கள் வண்ணமும் திண்ணமும் உடையனவாக இருக்கக் கொன்றை மலரைப் புனைந்திருக்கிறான். யாவருக்கும் எல்லாவற்றையும் வழங்கும் பெருஞ் செல்வப்பிரான் பிச்சை வாங்கும் ஓட்டைக் கையில் ஏந்தியிருக்கிறான். அதாவது நல்ல பாத்திரமாக இருக்கக்கூடாதா? பிரமனுடைய தலையோடு! இவற்றையெல்லாம் கண்டு யாருக்குத்தான் நகை தோன்றாது?

இறைவி தன் முல்லைபோன்ற பற்கள் சிறிதே தெரிய முறுவல் பூக்கிறாள். அந்த முறுவல் பரிகாசச் சிரிப்பா? அன்று, அன்று. இறைவனுடைய அருளேயாகிய தேவி, இவற்றின் கருத்தை நினைக்கிறாள். அதனால் உவகை பிறக்கிறது; புன்னகை பூக்கிறாள். உழுவைத் தோலையும், கொன்றைத் தாரையும், தலையோட்டையும் கண்டு முல்லை

முறுவல் பூத்து, காபாலக் கூத்தைக் கண்டு அதற்குத் தாளம் கொட்டுகிறாள்.

நவ்வந்துவனார் இறைவனை நோக்கிப் பேசுகிறார்: "இறைவா, கொலையுழுவைத் தோலை இடையிலே கட்டிக் கொன்றைத்தார் கழுத்திலே புரளத் தலையோட்டைக் கையிலே கொண்டு நீ காபாலக் கூத்தை ஆடும்போது, முல்லைபோன்ற முறுவலையுடைய உமாதேவி தாளம் போடுவாளோ? வேறு யார் அப்போது உனக்குத் துணை நின்று அப்படிச் செய்ய முடியும்?"

கொலை உழுவைத் தோல் அசைஇக்
கொன்றைத் தார் சுவற்புரளத்
தலை அங்கை கொண்டு நீ
காபாலம் ஆடுங்கால்
முலை அணிந்த முறுவலாள்
முற்பாணி தருவாளோ?

[கொலை செய்ய வந்த புலியின் தோலை இடையிலே கட்டி, கொன்றைமாலை கழுத்திலே புரண்டுஅசைய, பிரமனுடைய தலையோட்டை உள்ளங்கையிலே ஏந்திக் கொண்டு, நீ காபாலம் என்னும் கூத்தை ஆடுகையில், முல்லை அரும்பைப்போன்ற புன்னகையைப் பூக்கும் உமா தேவி, தாளத்தின் முதற்பகுதியாகிய பாணியைத் தருவாளோ?

உழுவை – புலி. அசைஇ - கட்டி. தார் –மாலை. சுவல்– பிடரி; பின் கழுத்து. அங்கை – அகங்கை. முலை –முல்லை; கொலை, தலை என்ற சொற்களுக்கு எதுகையாக அமையும் பொருட்டு நடுவெழுத்துக் குறைந்தது; இதை இடைக் குறையென்று இலக்கணக்காரர் சொல்வர். அணிந்த – போன்ற. முறுவலாள் - புன்சிரிப்பைச் செய்பவள். பாணி - தாளத்தின் முற்பகுதி.]

காபாலம் என்னும் கூத்தைப்பற்றிய செய்திகள் போதிய அளவு கிடைக்கவில்லை. 'அயன் தலையை அகங்கை யிலே ஏந்துகையினுலே காபாலம் என்று பெயர்பெற்ற கூத்து' என்று நச்சினுர்க்கினியர் எழுதியிருக்கிருர். பரதசேனுபதீயம் என்ற பெயரோடு வழங்கும் பிற்கால நூலால், இறைவன் ஆடிய பன்னிரு தாண்டவங்களுள் கபாலக் கூத்து ஒன்று என்பதும், அதற்கு மரக்காற் கூத்து, காளி தாண்டவம் என்று வேறு பெயர்கள் உண்டென்ப தும், அது குண்டல நிமித்தமாய்ச் செய்யப்பெற்றதென்ப தும் தெரிய வருகின்றன. *

மரக்கால் என்பது, காளி ஆடியதென்றும், அசுரர்கள் வஞ்சகத்தால் பாம்பு தேள் முதலிய உருவங்களை எடுத்துப் புகுந்தபொழுது அந்த உருவங்களை உழக்கி அழிக்க மரக்காலைக் கொண்டு ஆடியதனுல் அப்பெயர் வந்ததென் றும் அடியார்க்கு நல்லார் எழுதுகிருர் $

குண்டல நிமித்தம் ஆடியதென்பது, இறைவன் காளியோடு நடனமிட்டபோது, காதிலிருந்து தளரவிட்ட குழையைக் காலால் எடுத்துக் காதிலிடும் சாக்காக ஊர்த் துவ தாண்டவம் செய்து வென்றதை நினைப்பூட்டுகிறது. மரக்காற் கூத்து ஆடிய காளியை வென்ற ஊர்த்துவ தாண்டவமே $$ காபாலம் என்ற கூத்துப் போலும்!



---

* பரதசேனுபதீயம், மகாமகோபாத்தியாய டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு, பக்கம், 4

$ சிலப்பதிகாரம், 6: 60–61, உரை.

$$ ஊர்த்துவ தாண்டவம்: கல்லாடத்தில் 'வடவனம்' என்று தொடங்கும் பாட்டில் ஊர்த்துவ தாண்டவத்தைப் பற்றிய செய்திகள் வருகின்றன. அந்தப் பாட்டுக்குப்

இவ்வாறு மூன்று நடனத்தையும் வேறு வேருகச் சொல்லிப் பாராட்டிய புலவர் பாட்டை முடிக்கிருர்.

உமாதேவி தாளம் போட இந்தக் கூத்துக்களை ஆடின பெருமான், கூறுவதற்கும் குறிப்பதற்கும் அப்பாற்பட்டவன். ஆனுலும் நம்மிடம் உள்ள கருணையால் இத்தகைய உருவமும் ஆடலும் உடையவனுகத் தோற்றுகிருன். அவனிடம் நமக்கு அன்பு இருக்கவேண்டும்; ஆனுல் நம்மிடம் அதுதான் இல்லை. அன்பில்லாத பிராணியாக, பொருளாக நாம் இருக்கிருேம். 'இவர்களுக்குத்தான் அன்பு இல்லையே! நாம் இவர்களைக் கவனிப்பானேன்?' என்று ஆண்டவன் நினைப்பதில்லை. உயிர்கள் தன்னை மறந்தாலும் அவன் உயிர்களை மறப்பதில்லை.

"தாய்தன்னை அறியாத
கன்றுஇல்லை; அக்கன்றை
ஆயும் அறியும்;
உலகின் தாய் ஆயின் ஐய,
நீஅறிதி எப்பொருளும்;
அவைஉன்னை நிலையறியா;
மாயமிவை என்கொலோ!
வாராதே வரவல்லாய்!"

என்று கம்பர் சொல்லுவதுபோல், உயிர்க் கூட்டங்கள்

---

பொருள் தெளிவாகத் தெரியவில்லை. ஆயினும் அதில் மரக்கால், பிரமகபாலம் என்னும் இரண்டும் வருகின்றன.

"வடவனத் தொருநாள் மாறுபட்டு எதிர்ந்து
வழிநடம் தனது மரக்கால், அன்றி
முதற்றெழிற் பதுமன் முன்ணு அவ்வழி
மான்றலை கரத்தினிற் கூட்டினை வயக்கி...... "

அவனை அறியாமலே இருக்கின்றன. ஆனால் அவன் அவற்றை மறப்பதில்லை. அவற்றிற்கு அவன்பால் அன்பு இல்லை; ஆனால் அவனுக்கு அவற்றின்பால் அருள் இருக்கிறது; எப்படியாவது தன்னை அறிந்து தன்னிடம் வந்து இன்புறவேண்டும் என்ற விருப்பம் இருக்கிறது.

இத்தகைய கூத்துக்களை ஆடிய பெருமையை எடுத்து யாரும் சொல்லும்படியாக அவன் ஆடுகிறான். இந்த ஆட்டம் நமக்காக, அன்பு சிறிதும் இல்லா நமக்காக, அருள் பெரிதும் உடைய இறைவன் விரும்பி, வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத தன் நிலையினின்றும் இறங்கி வந்து, நமக்குப் பொருந்தும் உருவம் உடையவனாகிச் செயல் உடையவனாகி நின்று, தன் அருளே தேவியுருவத்தில் நின்று தாளம் போட, ஆடல்களை ஆடினான். அவனுடைய கருணையை என்னவென்று சொல்வது!

நவ்வந்துவனார் இவற்றை நினைந்து பாராட்டுகிறார்; "இறைவா, இப்படியெல்லாம் நாங்கள் பாராட்டும்படி அவ்வக்காலத்தில் உமாதேவி தாளம் கொட்ட, அன்பில்லாத எங்களுக்கு ஏற்ப உருவெடுத்து வந்து ஆடினாய் நீ. உன் அருள்தான் என்னே!" என்று பாடுகிறார்.

என ஆங்குப்
பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாண் இழை அரிவை காப்ப
ஆணம் இல் பொருள் எமக்கு அமர்ந்தனை ஆடி.

[ என்று நாங்களும் பிறரும் சொல்ல, அவ்வக்காலத்தில் பாணி, தூக்கு, சீர் என்றஇந்தத் தாளக்கூறுபாடுகளை மாட்சிமையையுடைய ஆபரணங்களை அணிந்த உமாதேவி கொட்டிப் பாதுகாக்க, சிறிதும் அன்பில்லாத பொருள்களாகிய ஏழையேங்களுக்காக ஆடல் புரிந்து பொருந்தினாய்

என—என்று சொல்ல. ஆங்கு—அக்காலத்து; அசை நிலையுமாம். பாணி தூக்கு சீர்—தாளத்தின் முற்காலம் இடைக்காலம் முடிவு காலம் என்னும் முக்காலப் பகுதி. 'என்ற இவை' என்பது விகாரப்பட்டு 'என்றிவை' என்று ஆயிற்று.

மாண் இழை – மாட்சிமையுடைய அணி; பிறரால் செய்யாமல் இயற்கையாக அமைந்தமையால் மாண் இழை ஆயின; எக்காலத்தும் கழற்றவேண்டிய அவசியம் இல்லாத மாட்சியை உடையவை என்றும் சொல்லலாம். அரிவை: இங்கே பருவத்தைக் குறிக்காமல் பொதுவாகப் பெண் என்ற பொருளில் வந்தது. காப்ப – காலத்தை வரையறுத்துப் பாதுகாக்க. ஆணம்—அன்பு. அமர்ந்தனை—பொருந்தினை. ஆடி அமர்ந்தனை.]

"நாங்கள் உன்னை அடைவதற்கு ஏற்ற வகையில் உயர்ச்சி பெறவில்லை; அன்பு செய்யவில்லை. ஆனாலும் நீ எங்களுக்கு ஏற்ற வகையில் உருவம் முதலியன பெற்று இறங்கி வந்து அருள் செய்கிறாய்" என்று இறைவன் கருணையைப் பாராட்டி வியக்கிறார் புலவர்.

தாளத்தை மூன்று கூறாகப் பிரிப்பதுண்டு. எடுத்தல், விடுத்தல், தொடுத்தல் என்ற மூன்று காலப் பிரிவு அவை. தாளத்தை முதலில் கொட்டுதலும், பிறகு இடையே கையை விடுத்தலும், மீட்டும் தொடுத்துக் கொட்டுதலு மாகிய அந்த மூன்றையும் முறையே பாணி, தூக்கு, சீர் என்பார்கள். இங்கே அம்பிகை தாளம் கொட்டினாள் என்பதையே தாளத்தின் கூறுபாட்டை நிகழ்த்தியதாகக் கூறினார். 'ஒரு தாளத்திற்குப் பாணி தூக்குச் சீரென்னும் மூன்றும் உளவேனும், ஒவ்வொன்று ஒவ்வோராடற்கு மிகுதி வகையாற் சிறந்தமை பற்றி ஒரோ வொன்றையே கூறினார்' என்று நச்சினார்க்கினியர் காரணம் கூறுகிறார்.

'இறைவன் உயிர்க் கூட்டங்களின் நன்மைக்காகப் பல உருவங்களை எடுத்துப் பல ஆடல் புரிகின்றான்' என்ற கருத்தை இப் பாடல் வலியுறுத்துகிறது.

கூறப்படாமல் குறிப்புக்கும் அப்பாற்பட்ட சிவ பிரான், அந்தணர்க்கு அருமறை பகர்ந்ததும், கங்கை யைச் சடையில் மறைத்ததும், திரிபுரத்தைச் செற்றதும், பேய்களைப் படையாகக் கொண்டு போர் புரியச் செய் வித்ததும், மணிமிடறும் எட்டுக் கையும் கொண்டிருப்ப தும், அம்மை தாளம் கொட்ட ஆடல் புரிந்ததும், துடிகொட்டியதும், நீறணிந்ததும், புலித்தோல் அணிந்த தும், கொன்றைமாலை புனைந்ததும், தலையோட்டை ஏந்தியதும் ஆகியவை நம்மிடம் கொண்ட கருணையால் அமைந்தவை என்று நவ்வந்துவனார் நினைப்பூட்டுகிறார்.

ஆறுஅறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து,
தேறுநீர் சடைக்கரந்து, திரிபுரம் தீமடுத்துக்
கூறாமல் குறித்ததன்மேற் செல்லும்—கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற்று எண்கையாய் கேள்இனி:

படுபறை பலஇயம்பப் பலஉருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி ஆடுங்கால் கோடுயர் அகல்அல்குற்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ!
மண்டமர் பலகடந்து மதுகையால் நீறுஅணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால் பணைஎழில் அணைமென்றோள்
வண்டரற்றும் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ!
கொலைஉழுவைத் தோல்அசைஇக் கொன்றைத்தார்
சுவற்புரளத்
தலைஅங்கை கொண்டுநீ காபாலம் ஆடுங்கால்
முலைஅணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ?
என ஆங்குப்
பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாணிழை அரிவை காப்ப
ஆணமில் பொருள்எமக்கு அமர்ந்தனை ஆடி.

# பிடியும் களிறும்

இல் வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் ஈடுபட்டு இன்பம் நுகர்ந்தார்கள். இல் வாழ்க்கையின் இரண்டாவது பயன் அறம் செய்வது; ஆதலால் தம்முடைய இல்லத்துக்கு வரும் விருந்தினரைப் பேணுதலும், தவத்தினரையும் அந்தணரையும் போற்றி உபசரித்தலும், சுற்றத்தாரைத் தழுவி அன்பு செய்தலும், இரப்பவருக்கு ஈதலும் ஆகிய பல துறைகளிலும் அவர்கள் சிறந்து நின்றனர். கண் இரண்டும் ஒன்றையே காணுதல் போல, அற நினைவிலே காதலனும் காதலியும் ஒன்றி நின்றார்கள். அதனால் அவர்களுக்குப் புண்ணியமும் புகழும் கிடைத்தன.

அவர்களுடைய புகழினால், அவர்களைக் குறை கூறுவாரே இல்லாமல் போனார்கள். பிறருக்குப் பல வகையில் உதவி புரிவதே அவர்களுக்கு வழக்கமாகப் போயிற்று. அதனால் அவ்வூரில் உள்ள அனைவரும் அவர்களுடைய உபகாரத்தால் நனைந்து, அன்புக்கு ஆட்பட்டு, நன்றி பாராட்டுகிறவர்கள் ஆகிவிட்டனர். மற்ற ஊர்களிலிருந்து யார் வந்தாலும் அவர்கள் வீட்டையே நோக்கி வந்தனர். ஊரின் பெயரைச் சொன்ன அளவிலே அடுத்தபடி அந்தத் தலைவனுடைய பெயரே எல்லோருடைய நினைவிலும் தோன்றியது. அத்தகைய புகழ் அவனுக்கு உண்டாயிற்று.

இவ்வாறு பல வகை அறங்களைச் செய்வதற்குப் பொருள் இன்றியமையாதது. புகழும் கல்வியும் நாளடைவில் வளரும். பொருளோ செலவு செய்யச் செய்யக்

குறையும். அது குறையக் குறைய மேன்மேலும் முயற்சி செய்து அதை ஈட்டினால்தான், செய்து வந்த அறங்களை இடையிலே முறிவில்லாமல் செய்து வரலாம். அது மாத்திரம் அன்று. இல்லறம் நடத்துபவன் அறம் செய்து இன்பம் நுகர்பவன். அந்த இன்ப நுகர்ச்சிக்கும் பொருள் வண்டும். மனைவியோடு வாழ்ந்து மக்களைப் பெற்று வாழும் அவனுக்கு அந்த வாழ்க்கைக்கு ஏற்ற வசதிகளைப் பெறுவதற்குப் பொருள் வேண்டும்.

அறம் செய்து இன்ப வாழ்வு நடத்திவந்த தலைவனுக்குப் பொருளைப் பற்றிய நினைவு வந்தது. தான் அது காறும் ஈட்டிய பொருளைக் கொண்டு சிறப்பாகவே அவன் இல்லறம் நடத்தி வந்தான். மீட்டும் பொருள் தேடி வந்தால்தான், தொடர்ச்சியாக அந்த அறங்களை நிகழ்த்தலாம் என்று தோன்றியது. பொருள் ஈட்டுவது அவனுக்குப் பெரிய காரியம் அன்று. வேற்று நாட்டுக்குச் சென்று தன் திறமையினால் மிகுதியான பொருளை ஈட்டி விடுவான். அப்படி ஈட்டும்போது அவன் செய்த அறம் அவனுக்குத் துணை நிற்கும். அவனுடைய அறிவும் ஆற்றலும் மிக விரைவிலே மிகுதியான பொருளை ஈட்டும் நிலையில் இருந்தன. ஒருமுறை போய்ப் பொருளை ஈட்டி வந்தால் அதை வைத்துக்கொண்டு பல காலம் வாழலாம்.

ஆனால், ஒரே ஒரு தடை மாத்திரம் இருந்தது. பொருள் ஈட்டுவதற்கு மற்ற நினைவுகளெல்லாம் ஊக்கத்தை ஊட்டின. ஆனால் அந்த நினைவு மட்டும் அந்த ஊக்கத்தைச் சிறிதளவு தளரச் செய்தது. அவன் செய்த அறம், அவனுடைய அறிவு, ஆற்றல், அறத்தின் பால் உள்ள வேட்கை, இன்ப நுகர்ச்சியிலே உள்ள விருப்பம்—எல்லாம் பொருள் ஈட்டும் பொருட்டு அவன் செல்லுவதற்குத் துணையாக இருந்தன. ஆனால் தன் காதலியைப் பிரிந்து செல்லவேண்டுமே என்ற நினைவு ஒன்றுதான் அவனுடைய ஊக்கத்துக்கு முட்டுக்கட்டை

போட்டது. அவள், போகக்கூடாதென்று சொல்வாளே என்ற நினைவு அன்று; தன்னுடைய பிரிவுக்கு அவள் உடம்பட்டாலும், தான் பிரிந்திருக்கும் காலத்தில் அவள் மிகவும் மனம் தளர்ந்து விடுவாளே என்ற எண்ணந்தான் அவனுக்குக் கவலையை உண்டாக்கிற்று.

இல் வாழ்க்கை நடத்துபவர்களின் கடமையை நன்கு உணர்ந்தவள் அவள். அவள் அறிவிற் சிறந்தவள்; அறத்திற் சிறந்தவள்; ஆடவர் கடமையையும் பெண்டிர் கடமையையும் உணர்ந்தவள்; அறம் செய்வதில் தளராத ஊக்கம் உடையவள். அவளுடைய துணை இல்லையேல் தலைவனுடைய அறச் செயல்கள் நன்கு நடைபெறா. அவளுடைய உயர்ந்த பண்பினால்தான் அவன் முட்டின்றி அறங்களை முடித்துப் புகழ் பெற்றான். அவளுடைய அறிவையும் அற நினைவையும் அழுத்திவிட்டு மேலோங்கி நிற்பது, அவனிடம் அவளுக்கு உள்ள அன்பு. அவள் அறிவு எத்தனை சமாதானம் சொன்னாலும் அந்த அன்பு மீதூர்ந்து அவளுக்கு ஏசறவை உண்டாக்கும். அவனைப் பிரிந்து வாழ்வதற்கு அவள் அறிவும் அற நினைவும் உடம்பட்டு உறுதி கூறினாலும், அவள் அன்பு பிரிவைத் தாங்காமல் நைந்து வாடச் செய்யும். அத்தனை முறுகிய அன்புடையவள் அவள்.

இவற்றையெல்லாம் அவன் நினைந்து பார்த்தான். பொருள் இல்லாவிட்டால் வாழ்க்கையே சுவையற்றுப் போகும் என்பதை உணர்ந்தவனாதலால், எவ்வாறேனும் அவளுக்கு ஆறுதல் கூறிப் புறப்பட்டுவிட வேண்டும் என்று உறுதி பூண்டான். ஒரு நாளிற் பல சொல்லி அவளைத் தேற்றுவதைக் காட்டிலும், சிறிது சிறிதாகப் பல செய்திகளைச் சொல்லி, மெல்ல மெல்ல அவளுடைய நெஞ்சில் ஆறுதலை உண்டாக்குவதுதான் நல்லதென்று முடிவு செய்தான்.

★

ஒரு நாள் அவர்கள் வீட்டுக்குத் துறவிகள் சிலர் வந்திருந்தார்கள். அவர்களை எந்த முறைப்படி வரவேற்க வேண்டுமோ, அப்படி வரவேற்று உபசாரம் செய்து உண்பித்தார்கள். தவம் நிரம்பிய அப் பெரியோர்கள் தலைவனையும் தலைவியையும் கண்டு அருள் மிகுந்து ஆசி கூறினார்கள். உள்ளத்திலிருந்து வந்த அந்த ஆசி மொழிகள் அவ்விருவருடைய செவிகளிலும் தண்மையாக விழுந்தன. உள்ளத்தைத் தொட்டு அங்கும் குளிர்ச்சியை உண்டாக்கின. இறைவனே அந்தத் தவ முனிவர் கோலத்தில் எழுந்தருளினானோ என்று கூடத் தோற்றியது. இல் வாழ்க்கையைத் தாம் மேற்கொண்டதற்கு உரிய பயன் முழுவதும் அன்று கிடைத்தது போல இருந்தது.

தவ முனிவர்கள் விடைபெற்றுச் சென்றனர். நல்லது செய்தோம் என்ற நினைவோடு கணவனும் மனைவியும் பெருமிதம் கொண்டு வீற்றிருந்தனர்.

தலைவி: அந்த முனிவர்களுடைய திருமுகத்தில் என்ன ஒளிவீசியது! அவர்களுடைய வார்த்தைகள் அன்பிலே தோய்ந்தல்லவா எழுந்தன?

தலைவன்; நூறு இல்லறத்தாரைப் பேணி உபசரிப்பதைக் காட்டிலும் ஒரு தவ முனிவரை உபசரிப்பது உயர்ந்தது. இல்வாழ்வோர் நம்மிடம் அன்புடையவர்களாக இருப்பார்கள். தவமுனிவர்களோ நமக்கு அருள்பாலிப்பார்கள். தவம் செய்பவர்களை வழிபடுவதனால் நாம் உள்ளத்தால் உயர்வோம். அவர்களுடைய ஆசி மொழிகள் நம் வருங்காலத்துக்குத் துணையாகநிற்கும். நமக்கு அருள் செய்வோராகிய அவர்கள் திறத்தில் நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் பன்மடங்கு பயனைத் தரும்.

தலைவி: இல் வாழ்க்கையில் விருந்தினரைப் பேணுவது முதலிய பல அறங்கள் இருக்கின்றன. அந்த அறங்களைக் குறைவறச் செய்வது மிக அரிது.

தலைவன்: ஆம்; அப்படி அரிதாகிய அறனை எய்தினாலும் நமக்கு அருளியோராகிய தவ முனிவருக்கு வேண்டியவற்றை அளித்தல் பின்னும் அரிது. அது புண்ணியம் உடையவர்களுக்கே ஆகும். அந்தப் பேறு கிடைகுமானால், அதன்பயனாக அதிகமான புண்ணியம்சேரும். ஞானிகளாகிய முனிவர்கள் ஆணவம் கழன்ற பெரியோர்கள்; செய்லொழிந்த சிலர்கள். அவர்கள் செய்யும் செய்கையின் பயன் அவர்களைச் சாராது. கர்மங் கடந்த சீவன்முக்தர்கள் அவர்கள். ஆயினும் உலகில் இயங்குவதால் அவர்களால் சில செய்கைகள் நிகழ்கின்றன. அவர்கள் உண்ணும் பொழுது சில பகுதிகள் சிந்துகின்றன. அவற்றை எறும்பு முதலியன உண்கின்றன. அவை உண்ணும்படி செய்தது புண்ணியச் செயல். அதற்குப் பயன் புண்ணியம். அவர்கள் நடக்கிறார்கள். அவர்களை அறியாமல் அவர்கள் காலடியில் ஓர் எறும்பு மிதிபட்டு இறக்கிறது. அது பாவச் செயல். அதற்குப் பயன் பாவம். முன்பு சொன்ன புண்ணியமும் இந்தப் பாவமும் ஞானிகள் இயங்கும்போது உண்டாகின்றன. ஆனால் இறைவன் திருவருளிலே ஊறி ஞானம் பெற்று நிற்கும் அவர்களை இருள் சேர் இரு வினையும் சேர்வதில்லை. விளைந்த புண்ணிய பாவங்களுக்குப் போக்கு ஒன்று வேண்டாமா? அந்த ஞானிகளை யார் ஆதரிக்கிறார்களோ அவர்களுக்கு ஞானியர் செயலால் விளைந்த புண்ணியமும், அவர்களுக்குத் துன்பம் செய்தும் இழித்தும் குறை கூறியும் வாழ்பவருக்கு அவர் செயலால் விளைந்த பாவமும்சேரும் என்று நூல்கள் கூறுகின்றன. ஆதலால் அருளியோராகிய பெரியார்களுக்கு அளித்

தலால் புண்ணியம் மிகுதியாகும். அந்தப் புண்ணியத்தாலே நமக்கு மேலும் மேலும் நன்மை உண்டாகும்.

தலைவி: அறன் எய்தல் அரிது; அதனினும் அரிது அருளியோர்க்கு அளித்தல். இது இப்போது எனக்கு நன்றாக விளங்குகிறது.

தலைவன்: அவ்வாறு செய்த அறத்தின் பயன் நமக்குப் பல துறையிலும் நம்மை அறியாமலே வந்து கை கொடுக்கும். ஆதலின் அந்தப் புண்ணியச் செயலை நாம் செய்வது தலைமையான கடமை. அதற்கு உதவியாக இருப்பது ஒன்று உண்டு.

தலைவி: நல்ல உள்ளத்தைத்தானே சொல்கிறீர்கள்?

தலைவன்: நல்ல உள்ளம் வேண்டுவது அவசியந்தான். உள்ளம் மட்டும் இருந்தால் போதுமா? வெறுங்கை முழம் போடாது. இல்வாழ்க்கை நடத்துகிறவனுக்கு அறிவு, ஆற்றல் எல்லாம் இருப்பது நல்ல முறையில் முயற்சி செய்து பொருள் ஈட்டுவதற்காகத்தான். பொருளை ஈட்டினால் அருளியோர்க்கு அளித்துப் புண்ணியத்தை ஈட்டிக்கொள்ளலாம். அந்தப் புண்ணியம் மீட்டும் பொருள் ஈட்டும்போது துணையாக நின்று எளிதிலே பொருளை ஆக்குவிக்கும்.

தலைவி: அருள் வழங்கும் ஞானியருடைய அருளைப் பெறச் செய்வது பொருள் என்று சொல்கிறீர்கள்.

தலைவன்: ஆம். அது மாத்திரம் அன்று. இல்வாழ்வானுக்கு வாழ்க்கையில் பல இடையூறுகள் வரும். மழை, வெயில், பனி முதலியவற்றால் வாழ்க்கைக்குத் துன்பம் நேரும்; விலங்கினாலும், மக்களாலும் நேரும்; நோயாலும் துயராலும் நேரும். இவற்றை

யெல்லாம் அணுகாமல் பாதுகாத்துக் கொள்வதற்குப் பொருள் வேண்டும். எவ்வளவு பெரிய பகையாக இருந்தாலும் பொருள் இருந்தால் அதை வென்று விடலாம். அவரோடு சேராமல் இடுக்கண் புரிவா ரெல்லாம் அவர் பெருமையைக் கண்டு மனம் குலைந்து அழிவர்; இடையூறு புரிந்தால் அவருடைய திறலுக்கு எதிர் நிற்கமாட்டாமல் தேய்ந்துபோவார். ஆகவே பெரிதாகிய பகையை வென்று பேணாரைத் தெறு வதற்கும் பொருளே தக்க கருவியாக உதவும்.

தலைவி : பொருளால் அறம் வளரும், பகை அழியப் பொருள் பெருகும் என்பதை இப்போது நன்றாகத் தெரிந்துகொண்டேன்.

தலைவன் : அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் இல்லறத்தில் கிடைப்பன. அறம் செய்யப் பொருள் வேண்டும் என்றும், பகைவரை அழித்துப் பொருள் செய்யவும் பொருள் வேண்டுமென்றும் சொன்னேன். இன்பம் நுகர்வதற்கும் அப்பொருள் துணையாக நிற்கும்.

தலைவி : உள்ளங்கள் ஒன்றை ஒன்று விரும்பிப் பொருந்து கின்ற காதல்தானே இன்பத்துக்கு இன்றியமை யாதது ?

தலைவன் : உண்மைதான். செடி வளரவேண்டுமானால் அதற்கு ஆணி வேர் இருக்கவேண்டும். வெறும் வளாரும் தழையும் இருப்பது போதாது. ஆணி வேரின் பலந்தான் செடியின் பலம். ஆனால் அந்த ஆணி வேரின் பலம் பயன்பட வேண்டுமானால் அதற்கு நீர் வேண்டாமா? ஆணி வேர் இல்லாத செடிக்கு நீர் விட்டாலும் விடாவிட்டாலும் வாடிப் போகும். ஆணி வேர் உள்ள செடி நீர் விட்டால் வாடாமல்

வளரும். புரிவு அமர்ந்த (விருப்பம் அமைந்த) காதலால் இன்பப் புணர்ச்சி விளைகிறது என்பது உண்மை. ஆனால் உடம்போடு வாழும் நமக்கு அந்த உடம்பு நன்றாக இருந்தால்தான் இன்பம் பெருகும். உள்ளத்திலே அமைந்த காதல், அளவளாவிக் கலக்கும் இன்பத்தை உண்டாக்குகிறது. அதற்கு ஏற்ற வசதிகள் வேண்டும். அவை பொருளினால்தான் அமையும். ஆதலால் பொருளானது அறத்தையும், பகையை வெல்லும் திறத்தையும் தருவதோடு, புரிவு அமர் காதலினால் புணரும் புணர்ச்சியையும் தரும் என்பதையும் உணர்ந்து கொள்ளவேண்டும்.

இவ்வாறு அன்று பொருளால் வரும் நன்மையைத் தலைவன் தன் தலைவிக்குத் தெளிவாக உணர்த்தினான். தான் பொருளுக்காகப் பிரியவேண்டியிருக்கும் என்று அப்போது சொல்லவில்லை. பின்னாலே பிரியும்போது இந்த வார்த்தைகள் பயன்படும் என்று அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தான்.

அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்
புரிவு அமர் காதலிற் புணர்ச்சியும் தரும்

என்று பொருளின் சிறப்பை ஒருவாறு அன்று அறிவுறுத்தினான்.



மற்றொரு நாள் தலைவனும் தலைவியும் பேசிக்கொண்டிருந்தார்கள். பொருள் தேடச் செல்பவர்கள் ஊர் கடந்து நாடு கடந்து மலை கடந்து செல்லவேண்டியிருக்கும் என்று தலைவன் சொன்னான். "பாலை நிலத்தின் வழியேகூடப் போக நேரிடும். பாலை நிலம் மிகவும்

கொடிய காட்சிகளை உடையது. அந்தக் கொடுமையை எண்ணித் தங்கிவிட்டால் பொருள் கிடைக்குமா?'' என்றான்.

''அப்படி என்ன கொடுமை அங்கே இருக்கப் போகிறது?'' என்று கேட்டாள் தலைவி. அப்படிக் கேட்கும் போது அவள்முகத்தைச் சிறிதே அசைத்தாள், அப்போது அவள் காதிலே அணிந்திருந்த கனமான குழை ஊசலாடு வதுபோல அசைந்தது. தலைவன் அதைக் கண்டு புன்னகை பூத்தான்.

தலைவன் : கனமான குழையை உடைய பெண்ணே, பாலை நிலத்தில் என்ன கொடுமை இருக்கிறதென்று கேட்கிறாய்? அதை நினைத்தாலும் நெஞ்சு வெந்து போகும். அது சுடுகாடு போல இருக்கும். எங்கும் ஒரே வெப்பம்; நெருப்பைப் பரப்பினாற் போன்ற வெப்பம். அங்கே மனிதன் நடக்க முடியுமா? அடி தாங்குமா? அடி தாங்கும் அளவின்றி, அழல் போன்ற வெம்மையை உடையது பாலை நிலமாகிய காடு; அதைப் போன்ற கடுமை வேறு எங்கும் இல்லை.

தலைவி : அந்தக் கடுமையான பாலை நிலத்தில் எந்த உயிரும் இருக்க இயலாதே!

தலைவன் : அதுதான் ஆச்சரியம்! ஈரமின்றி, நிற்க நிழலின்றி, நெருப்பாகக் கொதிக்கும் அந்தப் பாலைவனத்திலும் கண் குளிரக் காணும் காட்சி ஒன்று உண்டு.

தலைவி : நெருப்பு எரிவது அழகாக உள்ளது என்று சொல்வதுபோல இருக்கிறது, நீங்கள் சொல்வது. நெருப்புக்குப் புறம்பாக நிற்பவனுக்கு அது அழகாகத் தோற்றலாம். நெருப்பிலே வீழ்ந்து எரிகிறவனுக்கு அது அழகாக இருக்குமா?

தலைவன் : அந்த அதிசயத்தைத்தான் சொல்ல வருகிறேன், கேள். பாலை நிலமென்றால், படைப்புக் காலந்தொட்டு நீரும் நிழலுமற்ற பாலைவனமாக இருப்பது அன்று. இந்த நாட்டிலே இயற்கையான பாலை நிலம் இல்லை. மழை பொழியாமல் வறண்டுபோன சில பகுதிகள் பாலையாக மாறிவிடும். மலையைச் சார்ந்த குறிஞ்சி நிலப் பகுதிகளும், முல்லையாகிய காட்டு நிலத்தின் சில பகுதிகளும் கடுமையான கோடையில் சில சமயங்களில் பாலையாகிவிடும். அவ்விடத்தில் முன்பு நீர் தேங்கியிருந்த இடங்களில் நீரெல்லாம் வற்றிவிடும். மிகவும் ஆழமான நீர் இருந்த இடத்தில் நீர் வற்றிப் பேருக்குச் சிறிதளவு நீர் இருக்கும்.

தலைவி : பாலையில் நீர்கூட இருக்குமா?

தலைவன் : பனையளவு ஆழம் இருந்த இடத்தில் கால் கழுவக்கூடப் போதாத அளவுக்கு நீர் வற்றிவிடும் என்றால் அது ஒரு நீரா? ஆனால் அதற்குக்கூட ஏங்கிப் போய்ச் சில யானைகளும் மான்களும் அந்தப் பாலை நிலத்தில் திரியும்.

தலைவி : என்ன! யானைகளா? அவை அங்கே எப்படி வந்தன?

தலைவன் : முன்பு குறிஞ்சியாக இருந்தபோது அங்கே வாழ்ந்தவை. இப்போது மழை மறந்து பாலையாக மாறிவிடவே, போக்கிடம் காணாமல் யானைகள் தளர்ந்து வாடி அங்கும் இங்கும் நீர் தேடித் திரியும்.

தலைவி : அவற்றைப் பாலை நிலத்திற் செல்பவர்கள் பார்த்து இரக்கப்படுவார்கள். அதைப் பார்த்து எப்படிக் கண் குளிர முடியும்?

தலைவன் : அதைத்தானே சொல்ல வருகிறேன்? களிறும் பிடியும் கன்றுகளும் அடங்கிய யானைக் குடும்பம் ஒன்று பாலை நிலத்தில் இருப்பதாக வைத்துக்கொள். வைத்துக்கொள்வது என்ன? உண்மையாகவே இருக்கும். தண்ணீர்கூடக் கிடைக்காமல் அவை வாடி உயங்கும். பல இடங்களிலே திரிந்து உழன்று கடைசியில் முன்னே சொன்னேனே, அந்த இடத்துக்கு வந்து சேரும். அந்தக் குடும்பம் முழுவதும் தன் தாகம் முற்றும் தீரக் குடிப்பதற்கு அதில் தண்ணீர் ஏது? மிகக் குறைவாகவே இருக்கும். ஆழமான நீர் முன்பு இருந்த இடந்தான் அது. ஆனால் இப்போது இருப்பது சின்னீரே. அதைக் கண்டவுடன், யானைக்குட்டிகள் பரக்கப் பரக்க ஓடும். அந்தப் பள்ளத்திலே இறங்கும். அமைதியாகக் குடிக்குமா என்ன? உடுக்கைப்போன்ற தம் அடியினாலே அந்த நீரைக் கலக்கும். இளங்கன்று அல்லவா? விளையாட்டுப் புத்தி. மெல்லிய தலையையுடைய கன்றுகள் அவை. வெப்பத்தினால் அந்தத் தலை கொதித்துப் போயிருக்கும். ஆகவே, அவை குடிக்கட்டும் என்று உடன் வந்த பிடியும் களிறும் பார்த்துக்கொண்டே இருக்கும். தண்ணீரை எடுத்துக் கன்றுகளின் கயந் தலையிலே (மென்மையான தலையில்) தடவும். தம்முடைய கன்றுகள் நீரை வீணாக்குகின்றனவே என்று பிடியும் களிறும் எண்ணுவதில்லை. இவ்வளவு நேரம் அவை தவித்த தவிப்பைக்கண்டு மனம் நொந்து போயிருந்தவை அந்த இரண்டும். இப்போது தண்ணீரைக் கண்ட ஆனந்தத்தால் தப்புத்திப்பென்று காலை வைத்துக் குதிக்கின்றன. இதைத் தடை செய்யவேண்டாம் என்று அவை எண்ணுவது தானே அன்புக்கு இயல்பு?

தலைவி : கன்றுகள் மட்டும் நீருண்டால் போதுமா?

தலைவன் : அடியடியினால் கன்றுகள் கலக்கிய சிறிதளவு நீரை அவை குடித்த பிறகு பெரியயானைகள் உண்ணத்

தலைப்படும். இது கலங்கிய நீராயிற்றே என்று எண்ணுமா? தம் கன்றுகள் காலால் அளைந்ததனால் அந்த நீருக்குப் பின்னும் பெருமை அதிகமாகும். ஏழை குடிப்பது கூழாக இருந்தாலும், தன்னுடைய குழந்தை கைகளால் அளைந்து அதை உண்ண, எஞ்சியதை எத்தனை மகிழ்ச்சியோடு அவன் குடிப்பான்!

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்."

ஆகவே கயந்தலையையுடைய கன்றுகள் துடியடியால் கலக்கிய சின்னீரைப் பிடியும் களிறும் அளவற்ற உவகையோடும் ஆறுதலோடும் உண்ணத் தலைப்படும். எது முன்னாலே உண்ணும், தெரியுமா? சொல் பார்க்கலாம்.

தலைவி : களிறுதான். அதுதானே முறைமை? பிடி தன் கணவன் நீரை உண்பதைக் கண்டு களித்துப் பின் தான் உண்ணும் என்று நினைக்கிறேன்.

தலைவன் : உன் இயல்புக்கு ஏற்றபடியே எண்ணிச் சொன்னாய். ஆனால் அந்த முறை நல்ல காலத்துக்கு உகந்தது. பிடி அப்படித்தான் எண்ணும்; களிறு உண்ட பிறகு தான் உண்ணலாம் என்றே நினைக்கும். அதன் அன்பு நிலை அத்தகையது. ஆனால் களிறு தன் ஆண்மையாலே துன்பத்தைச் சகித்துக்கொண்டு, மெல்லியலாகிய பிடியை முன்னே உண்ணச் செய்யும். நீர் எல்லோருக்கும் போதுமா, போதாதா என்ற ஐயம் உண்டாகும்போது, தனக்குக் குறைவாக இருந்தாலும் குற்றமில்லை, தன் காதற் பிடிக்குப் போதியதை அளிக்கவேண்டும் என்ற உண்மையன்பே அவ்வாறு செய்வதற்குக் காரணம். தம் கன்றுகள் முன்னே நீர் உண்ண, அதைக் கண்டு உவந்தது ஒருவகை அன்பு. அது தாய்மையன்பு. காதற் பிடியோ தன் காதற்

களிறு முன் உண்ணவேண்டும் என்று நினைந்து, உண்ணுமல் நிற்கும். பிடிதான் முன்னே உண்ணவேண்டும் என்று களிறு நினைக்கும். இரண்டும் உண்ணுமல் வறிதே நிற்கையில் களிறு பிடியை வற்புறுத்தி நீரை உண்ணச் செய்யும். அது உண்ட பிறகே தான் உண்ணும்.

துடிஅடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடிஊட்டிப் பின்உண்ணும் களிறு.

தலைவி : அந்த வெம்மையினிடையே காதலின் தண்மை உச்ச நிலையில் இருக்கும் போலும்!

தலைவன் ; தன் நலத்தை அறவே மறந்து நிற்றல்தானே அன்பிற்கு அடையாளம்?



மற்ருெரு நாள்: அன்றும் பாலை நிலத்தைப்பற்றிய பேச்சே அவர்களிடையே நிகழ்ந்தது.

தலைவி : அன்று பாலைநிலத்தைப்பற்றிச்சொன்னீர்களே! யானைகள் திரியும் காடென்றீர்கள்; அவை நீர் உண்ணும் காட்சியை உணர்த்தினீர்கள். அவற்றிற்கு உணவு ஒன்றும் அங்கே கிடைக்காதா? எங்கேனும் மரங்கள் இருந்தால் அவற்றின் தழையை உணவாகக் கொள்ளலாமே.

தலைவன் : மரங்கள் இருக்கும். ஆனால் எல்லாம் இலை தீந்து விறகாகப் பயன்படும்படி நிற்கும். மழை பெய்யாமல் வறண்டுபோன அந்த நிலத்தில் இலைகளெல்லாம் உதிர்ந்து பட்டுப்போன மரங்களைத்தான் காண முடியும். அந்த மரங்களைப் பார்த்தால் நமக்கு

உண்மை தெரியவரும். ஒரு காலத்தில் அவை அந்த அளவுக்கு வளரும்படியாக அந்த நிலம் இருந்திருக்கத் தானே வேண்டும்? மரமாக வளரும்போது அங்கே மழை பெய்தது; நீர் இருந்தது; பசுமை இருந்தது; இலை தழைத்தது. இன்பம் இருந்தது. மழையின்றிப் பாலை நிலமாகிவிட்ட பிறகு இலைகள் வாடிச் சருகாயின; கொம்புகள் தீந்தன; மரம் பட்டுப்போயிற்று. இருந்த இன்பம் ஓடிப்போயிற்று. பிறகு அங்கே என்ன இருக்கும்? துன்பம் வந்து குடி புகும். இன்பத்தினின்றும் நீங்கி, இலைகளெல்லாம் தீய்ந்துபோன உயர்ந்த மரங்கள் நிரம்பியது காடு; அங்கே துன்பந்தான் நிரம்பியிருக்கும்; துன்புறும் தகையவே காடு.

இன்பத்தின் இகந்துஒரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடு.

தலைவி: நினைத்தாலே உடம்பு நடுங்குகிறது. நீரற்ற அந்தப் பாலையிலும் காதலினால் அமையும் தியாக உணர்ச்சி ஊற்றெடுத்துப் பெருகுகிறதே! அதுதான் ஆச்சரியம். அன்று சொன்னீர்களே, பிடியூட்டிப் பின் உண்ணும் களிற்றைப்பற்றி, அதை நினைக்க நினைக்க என் உள்ளத்தில் வியப்புப் பொங்குகிறது.

தலைவன்: அதுபோன்ற வேறு காட்சிகளும் உண்டு.

தலைவி: காதலின் சிறப்பைப் புலப்படுத்தும் காட்சியா?

தலைவன்: ஆம்.

தலைவி: மக்களிடையே அமையும் காதலுக்கும் அங்கே இடம் உண்டா?

தலைவன்: இல்லை. இறைவன் படைப்பிலே காதல் எந்தப் பிராணியினிடம் இருந்தால் என்ன? காதல் காதல்

தான். அது எவ்விடத்திலும் எக்காலத்திலும் சிறந்த உணர்வாகவே நிற்கும்.

தலைவி: பிடியும் களிறும் காதலால் பிணைப்புண்டதைச் சொன்னீர்கள். இப்போது சொல்ல வந்தது எவ்வகைக் காதல்?

தலைவன்: இது பறவையின் காதல். பாலைநிலத்தில் புறுக்கள் வாழும், இலை தீந்துபோன மரங்களின் கொம்புகளிலே அவை தங்கும். வெப்பம் தாங்காமல் தன் மென்மையான பெடை வருந்துவதை ஆண் புறுப் பார்த்து மனம் புண்படும். புறத்தே உள்ள வெம்மையைவிடத் தன் காதற் பெடை படும் துயரம் கண்டு அதன் அகத்தே எழும் வெம்மை மிகுதியாக இருக்கும். அன்பு கொண்ட இளைய அந்தப் பெடை தளர்ச்சி அடைவதைப் பார்த்து, அதை எவ்வாறு நீக்கலாம் என்று ஆண் புறுவானது சிந்திக்கும்: அதற்கும் ஆண்டவன் அறிவைப் படைத்திருக்கிறான். அதற்கு ஒரு தந்திரம் தோன்றும், உடனே தன் சிறகை விரித்துத் தன் பெடைக்கு நிழலை உண்டாக்கும்; மெத்தென்ற அச் சிறகாலே விசிறி வெப்பத்தை ஆற்றும். அன்பினால் செய்யும் இந்தச் செயல்கள் பெண் புறுவுக்கு அளவற்ற ஆறுதலை உண்டாக்கும். நிழல் செய்து காற்று வீசும் அந்தச் சிறகு மென்மையானது; ஆனால் அப்படிச் செய்யும் அன்பு எவ்வளவு வன்மையானது! எவ்வளவு உரம் வாய்ந்தது!

அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும் புறவு.

தலைவி அந்தப் புறுக்களைக் கற்பனைக் கண்ணினாலே கண்டு வியந்தாள்.



பின்னும் ஒருநாள் காதலர் இருவரும் பாலை நிலத்தைப் பற்றிய பேச்சிலே ஈடுபட்டார்கள். பிடியூட்டிப் பின் உண்ணும் களிற்றையும், மடப்பெடையின் வருத்தத்தை மென்சிறகால் ஆற்றும் ஆண் புறுவையும் நினைத்து நினைத்து வியந்தாள் காதலி. இன்று மறுபடியும் பாலை நிலத்தைப் பற்றிய செய்திகளைக் கேட்கலானாள் அவள்.

தலைவி: குறிஞ்சி நிலம் மாறிப் பாலையாகும் என்று சொன்னீர்களே; மலையின் பகுதிகள் மழையின்றி மாறினால் அவற்றில் சில மரங்களாவது இருப்பதில்லையா?

தலைவன்: மரங்கள் இருந்தால் அது பாலையாகுமா? குறிஞ்சியில் சில இடங்களில் வளம் கூடியிருக்கலாம்; சில இடங்களில் குறைந்திருக்கலாம். அவை யாவும் குறிஞ்சியே. அங்கே மக்கள் வாழலாம். பாலையில் மனிதர்கள் வாழவே முடியாத.

தலைவி: மலைப் பகுதிகளில் மழை பெய்யாமல் போனால் என்னாகும்?

தலைவன்: அடர்ந்த மலைப்பகுதிகள் எந்தக் காலத்தும் வளம் குன்றாமல் இருக்கும். மற்ற இடங்கள் வறண்டு போனாலும் தன் வளப்பத்துக்குக் கேடுவராமல் விளங்குவது மலை. ஆனால் சில சிறு குன்றுகள் உள்ள இடங்கள் மழையில்லாவிட்டால் பாலையாகிவிடும். அங்கே உள்ள மரங்கள் எல்லாமே வாடிப் போகும். மற்ற மரங்களைவிட வெப்பத்தை அதிகமாகத் தாங்குவது மூங்கில். அது கூட வாடிப் போய்விடும். உக்கிரமாகப் பாலையில் கதிரவன் தன் கதிர்களை வீசுவான். அந்த மிகுதியான கதிர்கள் கல்மிசை வளர்ந்த வேய்கள் வாடும்படியாகச் சுட்டுப் பொசுக்கும். அங்கே மனிதர்கள் தலைகாட்ட முடியாது. துன்னுவதற்கு அரிய தகைமையை உடையவை அந்தக் காடுகள்.

கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னருஉம் தகையவே காடு.

தலைவி: துன்னருந் தகையவாகிய அந்தக் காட்டிலும் காதல் துன்னுவது உண்டோ?

தலைவன்: பிடியும் களிறும், பெடையும் புறுவும் காட்டிய உன்னதமான காதல் திறத்தை இந்த வேய் வாடும் பாலையிலும் காணலாம்.

தலைவி: வலிய வேய் வாடும் கொடிய காடு ஆயிற்றே! அங்கேயுமா அத்தகைய காட்சி உண்டு?

தலைவன்: அந்தக் கொடிய காட்டிலே தான் மென்மை யான மான்களின் காதல் திறத்தைப் புலப்படுத்தும் காட்சியைக் காணலாம்.

தலைவி: வன்மையான வேயும் வாடும் காட்டில் மென்மை யான மான்கள் இருப்பதா!

தலைவன்: முன் குறிஞ்சியாக இருந்த இடமல்லவா? நிழல் செறிந்த காட்டினூடே ஓடித் திரிந்த அவை இப் போது நிற்க நிழலின்றித் தவிக்கும். மூங்கிலில் இலை கள் இருந்தாலும் ஏதோ கொஞ்சம் நிழல் இருக்கும். அதுதான் வாடி வற்றலாகிவிட்டதே; அங்கே ஏது நிழல்?

தலைவி: இங்கும் ஆண்மான் பெண்மான் இரண்டும் உண்டோ?

தலைவன்: ஆம்; அப்போதுதானே காதலின் உயர்வு புலப்படும்?

தலைவி: எப்படிப் புலப்படும்?

தலைவன்: நிழல் இல்லாமல் அலைந்துகொண்டே இருக்கும் மான்களில் ஒன்று ஆண்மான்; மற்றொன்று பிணை; மென்மை வாய்ந்த பெண்மான் அது; மடப்பிணை; அது மிகவும் வாடிப் போகும். நிழலில்லாத பொட்டலில் எங்கே நிழல் கண்டு ஒதுங்குவது? ஆண்மான் படாத பாடு படும், எப்படியாவது ஒரு மரத்தடியைக் கண்டு தன் காதற் பிணையை அதன் கீழ் நிற்கச் செய்யலாமென்று. ஆனால் பாலை நிலத்தில் அது முடிகிற காரியமா?

தலைவி: என்னதான் செய்யும்? சொல்லுங்கள். அது படுகிற பாட்டைக் காட்டிலும், அதைத் தவிக்கவிட மனமில்லாமல் நான் படுகிற பாடு அதிகமாக இருக்கிறது, என்ன ஆயிற்று? சொல்லுங்கள்.

தலைவன்: நிழலில்லாமல் வருந்திய மடப்பிணைக்கு ஆண் மான் தன் நிழலைக் கொடுத்துப் பாதுகாக்கும். எந்தப் பக்கமாகத் தான் நின்றால் அதன்மேல் நிழல் படுமோ, அப்படி நின்று, அதை அருகிலே நிறுத்தித் தன் நிழலும் பரிசமும் அதற்குக் கிடைக்கும்படி செய்யும்; எத்தனை அன்பு, பார்த்தாயா?

இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்நிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்
[தனரே.

தலைவி: பிடியூட்டிப் பின் உண்ணும் களிறு காட்டிய காதல் பெரிதென்பேனா? ஆண் புறவு தன் சிறகால் பெண்புறவின் வெம்மையைக் காத்த காதல் பெரிதென்பேனா? மடப்பிணைக்குத் தன் நிழலை அளித்த மானின் காதல் பெரிதென்பேனா? ஒன்றை ஒன்று விஞ்சி நிற்கிறதே! களிறு பிடியை ஊட்டின பிறகு தானும் உண்டது; அதனால் அதற்குச் சிறிது நன்மை

உண்டு. புறு தன் சிறகால் வீசும்போது அந்தக் காற்றுத் தனக்கும் சிறிது வீசும்; அதற்கும் சிறிது நன்மை உண்டு. ஆனால் ஆண்மான் வெயில் முழுவதை யும் தான் தாங்கித் தனக்குச் சிறிதும் நன்மையின்றிப் பிணைக்கு நிழல் தந்து நிற்பது எத்தனை சிறந்த தியாகம்! அன்பின் உறுதியை என்னவென்று சொல்வது!



தலைவன் தன் காதலிக்குப் பொருளின் அவசியத் தைப் பற்றி வற்புறுத்திச் சொல்லிவிட்டதாக எண்ணி ஆறுதல் பெற்றான். அப்பால் பொருள் ஈட்டும்பொருட்டு வேற்று நாடு செல்ல ஏற்பாடு செய்தான். குறிப்பாகத் தன் பிரிவைப் புலப்படுத்தினான். இன்ன காலத்தில் வரு வேன் என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

தலைவன் பிரிந்து சென்றதனால் தலைவிக்குத் துயரம் உண்டாயிற்று. ஆனால் பொருள் தேடச் செல்வது ஆடவன் கடமை என்பதையும், பொருளினால்தான் அறமும் இன்பமும் சிறக்கும் என்பதையும் அவள் தெரிந் தவள் அல்லவா? ஆதலின் அவன் வரும் வரைக்கும் துயரம் தோன்றினாலும் பொறுத்திருப்பதே தன் கடமை என்று உறுதி பூண்டாள். ஆனால் அவளிடம் முன்பு இருந்த விளக்கம் இல்லை. தலைவன் அருகில் இருந்தபோது அவள் உடம்பில் இருந்த பொலிவு இப்போது இருக்க முடியுமா? உணவையும் அலங்காரத்தையும் குறைத்துக் கொண்டாள்.

அவளுடைய செயல்களைக் கண்டபொழுது தோழிக் குக் கவலை உண்டாயிற்று. 'தலைவர் இன்னும் வரவில்லையே என்ற கவலை இவளுக்கு அதிகமாகிவிட்டது. அதனால் இப்படி மெலிந்து வருகிறாள், இவளுக்கு எப்படி ஆறுதல்

சொல்வது?' என்று அவள் உள்ளத்தினுள்ளே எண்ணி எண்ணி மறுகினாள். மகிழ்ச்சியும் ஊக்கமும்கொண்டு அவளுடன் கலந்து பழகிப் பொழுதுபோக்க வேண்டிய வள் அவள். அத்தகைய தோழி, 'இவளுக்கு ஆறுதல் கூறுவது எவ்வாறு?' என்ற சிந்தனையுள் ஆழ்ந்தாள்.

உண்மையில் தலைவியை ஆற்றுவிக்கும் அவசியமே இல்லையே! அவளுக்குத் தெரிந்த அளவு சமாதானம் தோழிக்குக்கூடத் தெரியாதே!

தோழி எப்போதும் போல் மகிழ்வோடு இராமைக்குக் காரணம் என்ன என்று தலைவி இப் போது ஆராயத் தொடங்கினாள். தன் பொருட்டே அவள் அப்படி இருக்கிறாள் என்பதை அவள் உணர்ந்த போது வியப்படைந்தாள். 'நான் கவலைப்படாமல் இருக்கிறேன்; அவர் நிச்சயம் உரிய காலத்தில் வந்து விடுவார் என்ற உறுதியோடு இருக்கிறேன். இவளோ நான் கவலைப் படுவேனே என்று மறுகுகிறாள். என்ன பேதைமை!' என்று எண்ணினாள். உண்மையை அவளுக்கு உணர்த்த வேண்டுமென்று விரும்பினாள்.

தலைவி : தோழி, பளபளப்பான அணிகளை அணிந்திருக் கிறாய்; வயங்கும் இழைகளை உடையவளே! உன் முகம் மாத்திரம் ஏன் இப்படி வாடியிருக்கிறது?

தோழி : தலைவர் சென்று பல நாட்களாயின. அதை நினைக்கும்போது மனம் அல்லற்படுகிறது.

தலைவி : அடி பைத்தியமே! நான் அல்லவா அல்லலுற வேண்டும்? அவர் வருவாரோ, வர மாட்டாரோ என்று ஐயமுறுகிறாயா?

தோழி : வந்தால் எல்லாக் கவலைகளும் ஓடிவிடும். உரிய காலத்தில் வராவிட்டால்...?

தலைவி : நீ ஏன் அப்படி நினைக்கிறாய்? எனக்கு அவர் வந்து விடுவார் என்ற துணிவு இருக்கிறது.

தோழி : துணிவா!

தோழிக்கு அவள் பேச்சைக் கேட்டு ஆச்சரியந்தான் உண்டாகிறது. யாருக்காக அவள் கவலைப்படுகிறாளோ, அவளுக்கு வருத்தம் இல்லையென்றால் வியப்பு உண்டா காதா?

தலைவி : ஆம்; அவர் வந்து விடுவார் என்றே துணிந்து சொல்கிறேன். ஏன் தெரியுமா? அவர் என்னிடம் பொருளின் உயர்வைச் சொல்லிப் பிரிந்தார். அரியன வாகிய அறங்களை மேற்கொண்டு, அருள் செய்து நம்பால் வந்த துறவியருக்கு வேண்டியவற்றை அளித்துப் புண்ணியம் ஈட்டும் செயல் பொருளினாலே வரும். பெரிதாகிய பகையை வென்று நம்மைப் பேணாமல் இருப்பவரைத் தெறுதலும் அப்பொரு ளாலே உண்டாகும். அவற்றிற்குமேல், மனம் விரும்பிப் பொருந்திய காதலினால் அமையும் இன்பமும் அதனால் விளையும். இவ்வாறு சொல்லி, அந்தப் பொருளை ஈட்டு வதற்குப் பிரிய வேண்டும் என்று தீர்மானம் செய்து, அதன்படியேபிரிந்து சென்ற காதலர், வருவாரென்றே தோன்றுகிறது; இதைத்துணிவாகவே சொல்கிறேன்; அதற்குரிய காரணங்களை இப்போது சொல்கிறேன், கேட்பாயாக.

அரிதாய அறன்எய்தி
 அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகைவென்று
 பேணாரைத் தெறுதலும்,
புரிவுஅமர் காதலிற்
 புணர்ச்சியும் தரும்எனப்

பிரிவுஎண்ணிப் பொருள்வயிற்
சென்றநம் காதலர்
வருவர்கொல்; வயங்கிழாஅய்!
வலிப்பல்யான்; கேள்இனி:

[கிடைப்பதற்கரிய அறத்தை மேற்கொண்டு, அருள் செய்து வந்தோராகிய துறவிகளையும் பிறரையும் உப சரித்து அவர்களுக்கு வேண்டியவற்றை வழங்குதலையும், பெரியதாகிய பகையை வென்று அப்படி வென்ற வலிமை யாலே தம்மை வழிபடாத மக்களை அழித்தலையும், விரும்பு தல் பொருந்திய காதலால் ஒன்றுபடும் இன்பத்தையும் பொருளானது தரும் என்று முன்னாலே சொல்லி, அதன் பொருட்டுப் பிரியும் பிரிவை நினைந்து, அதற்காகச் சென்ற நம் காதலர் வருவாரென்றே தோன்றுகிறது; விளங்கும் அணிகளை அணிந்த தோழி, வருவாரென்றே துணிகிறேன். அதற்குரிய காரணங்களை இப்போது கேட்பாயாக.

எய்தி–மேற்கொண்டு. அருளியோர்–அருள் செய் தோர். பேணார்–உறவு கொள்ளாதோர். தெறுதல்–அழித் தல், அடக்குதல் புரிவு–விருப்பம். வருவர்கொல்: கொல் என்பது அசைநிலை. வயங்கு இழை-விளங்கும் ஆபர ணத்தை அணிந்தவள்; இது விளியாகி வயங்கிழாஅய் என வந்தது வலிப்பல்-துணிவேன். இனி–இப்பொழுது.]

தோழி : என்ன காரணம்?

காரணங்கள் இன்னவென்று கூற வருகிறாள் தலைவி. முன்பு தலைவன் பாலைநிலத்தின் கொடுமையைக் கூறிய தோடு அங்கே நிகழும் அன்பு நிகழ்ச்சிகளையும் சொன்னான் அல்லவா? அவற்றை இப்போது நினைத்துப் பார்க்கிறாள்.

தலைவி : பாலை நிலம் அடி பொறுக்க முடியாத அளவுக்கு நெருப்பைப் போன்ற வெப்பம் உடையதாக இருக்

கும்; அதனால் மிகவும் கடுமையானது காடு என்று தான் சொன்னார்.

தோழி : அது நமக்கு இன்னும் அதிக வருத்தத்தைத் தரும் செய்தியாயிற்றே!

தலைவி : பொறு, பொறு. அப்படிக் காடு கடியதாக இருந்தாலும், அங்கே துடிபோன்ற சிறிய அடியையும், மெல்லிய தலையையும் உடைய யானைக் குட்டிகள் கலக்கிய சிறிதளவு நீரை முதலில் பிடி உண்ணும்படி செய்துவிட்டு அப்பால்தான் களிறு குடிக்குமாம். அவர் அதையும் சொன்னார்.

அடிதாங்கும் அளவுஇன்றி
அழல்அன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய்,
காடுஎன்றார்; அக்காட்டுள்
துடிஅடிக் கயந்தலை
கலக்கிய சின்னீரைப்
பிடிஊட்டிப் பின்உண்ணும்
களிறுஎனவும் உரைத்தனரே!

[கனமான குழையை அணிந்தவளே, பாதமானது பொறுக்கும் அளவுக்கு இல்லாமல் மிகுதியாக நெருப்புப் போன்ற வெப்பம் இருத்தலால் பாலை நிலப் பகுதிகள் மிக்க கடுமையானவை என்று சொன்னார்; அந்தக் காட்டில் உடுக்குப் போன்ற அடியையும் மெல்லிய தலையையும் உடைய யானைக் கன்றுகள் கலக்கின சிறிதளவு நீரைத் தன் காதற் பிடிக்கு ஊட்டிவிட்டுப் பின் எஞ்சியதைக் களிறு உண்ணும் என்றும் தலைவர் சொன்னார்.

அழல்—நெருப்பு. கனங்குழாய்: கனங்குழை என்பதன் விளி. துடி—உடுக்கு. கய—மென்மை. கயந்தலை: அன்மொழித் தொகை. சிறிதளவு நீரைச் சில நீர் என்பது மரபு.]

தோழி : அவர் வருவார் என்பதற்கும் அவர் சொன்ன தற்கும் என்ன தொடர்பு?

தலைவி : சொல்கிறேன். பின்னும் அவர் சொன்னதைக் கேள். இன்பமெல்லாம் போய் நீங்க, இலைகள் தீந்து போன பட்ட மரங்கள் இருத்தலால் துன்பத்தைத் தரும் தன்மையை உடையன பாலைப் பகுதிகள் என்று அவர் சொன்னார். ஆனால் அந்தத் துன்புறும் தகையவாகிய காட்டில் அன்பு கொண்ட மடப் பெடை தளர்ச்சியுற்ற வருத்தத்தைக் கண்டு ஆண் புறாவானது தன்னுடைய மெல்லிய சிறகினால் ஆற்று விக்கும் என்றும் சொன்னார்.

இன்பத்தின் இகந்துஒரீஇ
இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே
காடுஎன்றார்; அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை
அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும்
புறவுஎனவும் உரைத்தனரே!

[இன்பத்தினின்றும் விட்டு நீங்கி இலைகள் கரிந்து போன பட்ட மரங்களினால், தம்பால் அடைந்தார்க்குத் துன்பத்தை உண்டாக்கும் தன்மையுடையன பாலைவனப் பகுதிகள் என்று சொன்னார். அந்தக் காட்டில், அன்பு கொண்ட இளைய பெண் புறாவானது வெப்பத்தால் தளர்ந்து பெற்ற வருத்தத்தை ஆண் புறாவானது தன் மெல்லிய சிறகுகளால் ஆற்றும் என்றும் சொன்னார் தலைவர்.

இகந்து ஒரீஇ–விட்டு நீங்கி. தீந்த–கருகிய. உலவை–பட்ட மரம்; உலர்ந்த கொம்புமாம். தகைய-தன்மையை

உடையன. மடப்பெடை—இளமையையுடைய பெண்புறு. அசை இய—தளர்ச்சியுற்ற. சிறகர்—சிறகு; சிறகு சிறக ரென்று வருவது போலி; வண்டு, வண்டர் என்று வருவது போல்வது.]

தோழி : இன்னும் என்ன சொன்னார்?

தலைவி : குன்றின் மேலே முளைத்த மூங்கில்கள் வாடும் படி மிக்க கதிர்களைக் கதிரவன் வீசுவானும். அப்படிச் சுடுவதாலே பாலைநிலம் அணுகுவதற்கு அரியதாம். ஆனாலும் அங்கே காதலால் விலங்குகளும் தியாக உணர்ச்சியுடையனவாக இருத்தலைக் காணலாமாம். அந்தக் காட்டிலே நிற்பதற்கு நிழல் இல்லை. அதனால் வருந்திய பெண் மானுக்கு அருகில் தானே நின்று ஆண் மான் தன் நிழலை அளித்துப் பாதுகாக்குமாம்.

கல்மிசை வேய்வாடக்
கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉம் தகையவே
காடுஎன்றார்; அக்காட்டுள்
இன்னிழல் இன்மையான்
வருந்திய மடப்பிணைக்குத்
தன்நிழலைக் கொடுத்து அளிக்கும்
கலையெனவும் உரைத்தனரே.

[குன்றின்மேல் வளர்ந்திருந்த மூங்கிலும் வாடும்படி யாக மிகுதியான கிரணங்கள் சுடுவதால் பாலைநிலப் பகுதிகள் யாரும் சேர்வதற்கரிய தன்மையை உடையவை என்று தலைவர் சொன்னார்: அந்தக் காட்டில் இனிய நிழல் இல்லாமையால் வருந்திய இளமையையுடைய பெண் மானுக்குக் கலை மான் தன் நிழலைக் கொடுத்து அதன் உயிர்போகாமல் பாதுகாக்கும் என்றும் அவர் சொன்னார்.

கல்—குன்று. வேய்—மூங்கில். கனை—மிகுதி. தெறுதல்—சுடுதல். துன்னுதல்—சேர்தல்; துன்னரூஉம்—சேர்தற்கு அரிய. பிணை—பெண் மான். அளிக்கும்—பாதுகாக்கும். கலை—ஆண் மான். தன் நிழலைக் கொடுத்து அளிக்கும் என்பதற்கு, 'தான் நின்று தன் நிழலைக் கொடுத்து உயிரை அளியா நிற்கும்' என்று நச்சினார்க்கினியர் பொருள் எழுதுவர்.]

தோழி: இவற்றிற்கும் அவர் வருவதற்கும் என்ன தொடர்பு என்றல்லவா கேட்கிறேன்?

தலைவி: விலங்கினங்கள் தம்முடைய காதலிமாரைக் காப்பாற்றுவதைக் கண்டவர், தாம் தம் காதலியையும் வாடாமல் காப்பாற்ற வேண்டும் என்று கருத மாட்டாரா? ஆதலால் இவற்றைக் காணுந்தோறும் அவருக்கு என்னிடம் இரக்கம் உண்டாகும். அது உள்ளத்திலே இடங்கொள்ளும். பொருள் ஈட்டப் போன இடத்தில் அந்த இரக்கம், விரைவிலே பொருளை ஈட்டிக்கொண்டு திரும்பவேண்டும் என்ற நினைவை உண்டாக்கும். ஆகவே உரிய காலத்தில் அவர் திரும்பி வருவார் என்று துணிந்தேன். இப்படியெல்லாம் சொல்லிப் போனவர் இத்தகைய நல்ல காட்சிகளை உடைய பாலைநிலத்தின்வழியே செல்வார். அவ்வாறு செல்லும்போது அந்தக் காட்சிகளைக் காண்பவர் என்னுடைய அழகு கெடும்படி செய்ய மாட்டார்; பலரும் பாராட்டிப் பேசும் என் அழகு குலையும்படியாக அங்கே நெடுங்காலம் தங்கியிருக்க மாட்டார். இந்தக் காரணம் மட்டும் அன்று. என் துணிவுக்கு வேறு காரணங்களும் உண்டு.

தோழி: அவை எவை?

தலைவி: நல்ல சகுனங்கள் உண்டாகின்றன. நம்முடைய வீட்டில் பல்லிகள் அடிக்கடி நல்ல இடங்களிலே இசைந்து நல்ல சொல்லைச் சொன்னதைக்கேட்டேன்; பல முறை கேட்டேன். ஊருக்குப் போனவர்கள் திரும்பி வருவதைக் குறிப்பிக்கும் சொற்களாக இருந்தன அவை. என் கண்ணைப் பார்த்துப் பார்த்து நல்ல கண் என்றும் எழிலையுடைய கண் என்றும் மையை உண்ட கண் என்றும் நீ பாராட்டுவாயே; அந்தக் கண்களில் இடக் கண் ஆடுகிறது. அது நல்ல நிமித்தம் அல்லவா?

என ஆங்கு
இனைநலம் உடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்
பல்லியும் பாங்குஒத்து இசைத்தன;
நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே.

[என்று சொல்லிய இத்தகைய நல்ல காட்சிகளை உடைய பாலை நிலத்தின் வழியே சென்ற தலைவர் பிறர் பாராட்டுதற்குரிய என் அழகை வாடச் செய்பவர் அல்லர்; நம் வீட்டில் பல்லிகளும் நல்ல இடங்களிலே பொருந்தி நல்ல நிமித்தமாகிய ஒலிகளைச் செய்தன; நல்ல அழகையுடைய மையுண்ட என் கண்களில் இடக் கண்ணும் ஆடுகின்றது.

என ஆங்கு: அசை நிலை. இனை நலம்—இத்தகைய நன்மை; இனைய நலம் என்பதன் விகாரம். கானம்—பாலை நிலம். புனை நலம்-வருணிக்கும் அழகு. வாட்டுநர்—தம் பிரிவால் வாடச் செய்பவர். மனையின்—வீட்டில். பாங்கு—இடம். உண் கண்—மையுண்ட கண். மகளிருக்கு இடக் கண் துடித்தல் நல்ல நிமித்தம்.

இனை நலம் என்பதற்கு, 'இங்ஙனம் அவர்க்கு அருள் வந்தவை காட்டுதலின் அவர் வருந்துவதற்குக் காரண

மான நன்மைகள்' என்று பொருளுரைத்தார் நச்சினார்க்கினியர்.]

தலைவி தலைவன் கூறிய சொற்களை நினைந்தாள். பல்லியின் சொல்லைத் தேர்ந்தாள்; தன் இடக் கண் துடித்ததை ஓர்ந்தாள். தலைவன் வந்துவிடுவான் என்று நிச்சயித்தாள்.

அரிதாய அறன்எய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தரும்எனப்
பிரிவுஎண்ணிப் பொருள்வயிற் சென்றநம் காதலர்
வருவர்கொல், வழங்கிழாஅய்! வலிப்பல்யான்;
கேள்இனி :

அடிதாங்கும் அளவின்றி அழல்அன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய் காடென்றார்; அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடிஊட்டிப் பின்உண்ணும் களிறுஎனவும் உரைத்தனரே;

இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடுஎன்றார்; அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும் புறவெனவும் உரைத்தனரே;

கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉம் தகையவே காடுஎன்றார்; அக்காட்டுள்
இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்நிழலைக் கொடுத்தளிக்கும் கலைஎனவும் உரைத்தனரே;

என ஆங்கு,

இனைநலம் உடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்

பல்லியும் பாங்கொத்து இசைத்தன;
நல்எழில் உண்கணும் ஆடுமால் இடனே.

இது தலைவர் அறத்தினால் பொருள் ஆக்கி, அப் பொருளால் காமம் நுகர்வேன் என்று கூறிப்பொருள் வயிற் பிரிகின்ற காலத்து, காடு கடியவாயினும் இவ் வகைப்பட்டனவும் உளவென்று கூறினார், அவை காண்டலின் வருவரெனத் தலைவி தோழிக்குக் கூறி, அதற்கு நிமித்தமும் கூறி ஆற்றுவித்தது.

இது சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பாட்டு: கலித்தொகையில் முதற் பகுதியாகிய பாலைக் கலியில் பத்தாவது பாட்டாக அமைந்தது.

# திருமண முயற்சி

தலைவனும் தலைவியும் ஒருவரும் அறியாமல் களவுக் காதல் புரிந்து வந்தனர். தலைவியின் உயிர்த் தோழி மாத்திரம் அவர்களுக்குத் துணையாக இருந்தாள். பல காலம் ஒருவரும் அறியாமல் காதலர் இருவரும் சந்தித்து அளவளாவுவதில் பல இன்னல்கள் இருந்தன. ஆதலால் காதலியை முறைப்படி மணம் புரிந்துகொண்டு உலகறிய இல்லறம் நடத்துவதே சிறந்தது என்று தலைவன் உணர்ந்தான். சான்றோரைத் தலைவியின் வீட்டுக்கு அனுப்பி மணம் பேசும்படி ஏற்பாடு செய்தான்.

சான்றோர் மங்கலப் பொருளுடன் தலைவியின் வீட்டுக்குச் சென்றார்கள். அவளுடைய தந்தையைக் கண்டு, வந்த காரியத்தைத் தெரிவித்தார்கள். தலைவியின் தந்தையும் தமையன்மாரும் தாயும் தங்களுக்குள் யோசித்தார்கள். அயல் ஊரினனாகிய தலைவனுடைய நிலையைப் பற்றிய செய்திகள் அவர்களுக்கு அதிகமாகத் தெரியா. அதனால் அவர்கள் தம் பெண்ணை அவனுக்குக் கொடுக்க இணங்கவில்லை. தாம் நன்கு அறிந்த குடும்பத்தில் கொடுக்கலாம் என்பது அவர்கள் எண்ணம். அந்தத் தலைவனுக்கும் அவர்கள் பெண்ணுக்கும் பிரிப்பதற்கு அரிய காதல் நிலவுவதை அவர்கள் அறியவில்லை.

தலைவன் மணம் பேச விடுத்தபோது, அவர்கள் மறுத்த செய்தி அவனுக்கும் தலைவிக்கும் தோழிக்கும் மிக்க ஏமாற்றத்தை உண்டாக்கியது. காதல் என்பது என்ன தினையா, வரகா, எந்தப் பானையிலும் போட்டு வைக்கலாம் என்பதற்கு? அவர்களிடையே அமைந்த காதல், உள்ளம் ஒன்றிய காதல்; உயிரோடு இணைந்த

காதல்; பிறவிதோறும் வரும் காதல். அவர்களுடைய காதல் வாழ்வுக்கு இடையூறு நேர்ந்தால் பிறகு வாழ்வதிற் பயனில்லை; சாதலே இனிதாகிவிடும். இவற்றையெல்லாம் தலைவியைப் பெற்றவர்கள் எங்கே அறியப் போகிறார்கள்?

"இனி என்ன செய்வது?"—இதுதான் தலைவன் தலைவியர் உள்ளத்தே எழுந்த கலக்கம். ஒருவரும் அறியாமல் தன் காதலியை அழைத்துக்கொண்டு தன் ஊருக்குச் சென்று அங்கே தலைவன் அவளை மணந்து கொள்ளலாம். அப்படிச் செய்தால் தலைவியின் கற்பும் அவ்விருவருடைய காதலும் பயனடையும். அவ்வாறு அழைத்துச் செல்வது புதிது அன்று; எங்கும் நடப்பதுதான்.

தோழியுடன் தலைவி யோசனை செய்தாள். "தலைவருக்கும் உனக்கும் தொடர்பு உண்டு என்பதை நம்மவர்கள் உணரவில்லை. தாம் செய்த காரியத்தால் உன் கற்புக்கு ஏதும் வரும் என்பதையும் அவர்கள் தெளியவில்லை. ஆகவே, அவர்கள்மேல் பிழை ஏற்றுவது தக்கது அன்று" என்று தோழி சொன்னாள்.

"அவர்கள் செய்தது சரியென்று சொல்கிறாயா?" என்று கேட்டாள் தலைவி.

"அவர்கள் சரியானபடி செய்யக்கூடியவர்களே. உண்மையை உணராமையால் இந்தப் பிழையைச் செய்திருக்கிறார்கள்."

"இனிமேல் என்ன செய்வது?"

"இப்பொழுது காரியம் ஒன்றும் மிஞ்சிப் போய்விடவில்லை. அவர்களுக்கு உண்மை தெரிந்தால் தங்கள் முடிவை அவர்கள் மாற்றிக்கொள்ளக்கூடும்."

"உண்மை தெரிந்தால்தானே?"

"உண்மையைத் தெரிவித்தால் தெரிந்து கொள்கிறார்கள்."

"தெரிவிப்பதா? நானும் தலைவரும் களவிலே அளவளாவி வருகிறோம் என்று அவர்களிடம் சொல்வதா? அப்படி யார் சொல்வது?"

"யார் சொல்வார்கள்? நான்தான் சொல்லவேண்டும். எப்படிச் சொன்னால் நம்மேல் சினம் உண்டாகாதோ, அப்படிச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். அதற்கு ஏற்ற வழி ஒன்று உண்டு."

"நீதான் இவ்வளவு காலமும் எங்களுக்குத் துணையாக இருந்து எங்கள் காதல் வளரும்படி செய்தாய். இனியும் நீதான் அதைப் பயனுறும்படி செய்யவேண்டும்" என்று தலைவி கூறினாள்.

தோழி எப்படியாவது உண்மையைத் தம்மவர்களுக்கு வெளிப்படுத்த வேண்டும் என்ற உறுதி பூண்டாள். தலைவியைப் பெற்ற தாயாகிய நற்றாயிடம் சொல்வதற்கு அஞ்சினாள்; அப்படிச் சொல்வது முறையும் அன்று. அந்த நற்றாய்க்கு உயிர்த் தோழியும் தலைவியை வளர்த்தவளுமாகிய செவிலிக்குக் கூறலாம் என்று எண்ணினாள். அவள் தோழியைப் பெற்ற தாய். தன் சொந்தத் தாயிடம் அச்சமின்றி உண்மையைப் பக்குவமாகக் கூறிவிடலாம் என்று தோழி துணிந்தாள்.



ஒருநாள் தோழியும் அவளைப் பெற்ற தாயாகிய செவிலியும் பேசிக் கொண்டிருந்தார்கள். தலைவியை

மணந்துகொள்வதற்காகப் பலர் முயல்வதைப் பற்றிப் பேச்சு எழுந்தது.

"இவ்வளவு அழகும் அறிவும் உள்ள பெண்ணை மனைவியாக அடையும் பேறு எந்த ஆடவனுக்கு இருக்கிறதோ, தெரியவில்லை" என்றாள் செவிலி.

தோழி : இனி அவளுக்கென்று புதியவனாக ஒருவன் வரப் போவதில்லை.

செவிலி : இனிமேல் பிறந்து வரப்போவதில்லை என்பது உண்மைதான். ஆனால் எங்கே பிறந்திருக்கிறானோ, அதுதான் தெரியவில்லை.

தோழி : புதியவனாக வரப் போவதில்லை என்றுதான் சொன்னேன்.

செவிலி : நீ சொல்வது விளங்கவில்லையே!

தோழி : நம்முடைய தலைவியை இன்னும் சிறு பெண் என்று எல்லோரும் நம்பிக்கொண்டிருக்கிறார்கள்.

செவிலி : அவள் சிறு பெண்தான்; ஆனால் தன் பருவத்தை மிஞ்சிய அறிவுடையவள்.

தோழி : அதைச் சொல்ல வரவில்லை. அவள் அற்புதம் செய்யும் வன்மை பெற்றிருக்கிறாள்.

செவிலி : அற்புதமா? அது என்ன?

தோழி : இந்த நிலத்தில் சில காலமாக மழை பெய்யவில்லையென்று வைத்துக் கொள்வோம். அப்படி மழை அருமையாகப் போன காலத்தில் நாம்

மழைக்கு அலமந்து வாடி வேண்டினுல் அவள் மழையை வருவிக்கும் பெருமையை உடையவள்.

செவிலி : அத்தகைய ஆற்றல் இவளுக்கு எப்படி வந்தது?

தோழி : தம் காதலரையே தெய்வமெனப் போற்றும் கற்புடைய மகளிர் நினைத்தால் மழை பெய்யும் என்று பெரியோர் உரைப்பதை நீ கேட்டதில்லையா?

செவிலி : பைத்தியக்காரப் பெண்ணே, நீ என்ன உளறு கிருய்? கற்புடைய மகளிரைப் பற்றியல்லவா சொல் லுகிருய்? இவள் கன்னிப் பெண் ஆயிற்றே!

தோழி : அல்ல, அல்ல. இவளும் அருந்ததி முதலிய கற்புடைய மகளிரோடு சேர்த்து எண்ணுவதற்குரிய தகுதி உடையவளாகி விட்டாள்.

செவிலி : உன் மூடு மந்திரம் எனக்கு விளங்கவில்லை. விளக்கமாகச் சொல்.

தோழி : விளக்கமாகவே சொல்கிறேன்; உள்ளது உள்ள படி சொல்கிறேன். சினமின்றிக் கேள்.

தோழி ஒரு கதை போலவே சொல்ல ஆரம்பித்தாள். தலைவியைத் தலைவன் இயற்கையாகச் சந்தித்தான் என்று சொல்லவில்லை அவர்கள் சந்தித்ததற்குத் தக்க காரண மாக ஒரு செய்தியைத் தானே புனைந்து சொல்லலானுள்.



தோழி : முன்பு ஒரு நாள் பூக் கொய்வதற்காக நாங்கள் மலைச் சாரலுக்குச் சென்ருேம். தலைவியும் நானும் மற்றத் தோழிமார்களும் சேர்ந்து விளையாட்டாகப்

பேசிக்கொண்டே சென்றோம். மலைச் சாரலில் சலசல வென்று அருவி வீழ்ந்து பின்பு ஆறாக ஓடுகிறது அல்லவா? அந்த ஆறுவரைக்கும் சென்றுவிட்டோம். ஆறு வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. அழகான ஆறு. காமர் கடும் (வேகமான) புனலில் குதித்து விளையாட வேண்டும் என்ற ஆவல் எங்கள் அனைவருக்கும் எழுந்தது.

எல்லோரும் சேர்ந்து நீரில் இறங்கினோம். துளைந்து விளையாடத் தொடங்கினோம். ஆற்றில் நீர் வேகமாக ஓடியது; ஆழமாகவும் இருந்தது. ஆகையால் கரையோரமாகவே விளையாடினோம். ஆற்றுக்குள்ளே நெடுந்தூரம் செல்லாமலே இருந்தோம். அப்போது தலைவி விளையாட்டுப் போக்கிலே சற்றுத் தள்ளிப் போய்விட்டாள். அந்த இடத்தில் ஆழம் அதிகமாக இருந்தது. கால் நிலைகொள்ளவில்லை. ஆகவே, அவள் கால் தளர்ந்தது. நீரோட்டத்தோடே அவள் போக ஆரம்பித்தாள்.

செவிலி : அப்புறம்?

தோழி : சொல்கிறேன் கேள். பயத்தினால் 'வீல்' என்று கத்தினாள் அவள். தன் தாமரை போன்ற கண்களைக் கையால் மூடிக்கொண்டாள். நாங்களும் அச்சத்தால் கத்தினோம். "ஐயோ!" என்று அலறினோம். தோழிமார் எல்லோரும் புலம்பினோமேயன்றி அவளை மீட்கத் துணியவில்லை. சில கணங்களே இந்த நிலை இருந்தது. அப்போது தடாலென்று ஓர் ஒலிகேட்டது. யாரோ மிக வேகமாக நீரிற் பாய்ந்ததனால் ஏற்பட்ட அரவம் அது. நாங்கள் பார்த்துக் கொண்டே நின்றோம். கட்டிளங்காளை ஒருவன்தான் அப்படிப் பாய்ந்தான். அவன் அந்தப் பக்கமாக வேட்டையாட வந்தவன், எங்கள் கூக்குரலைக் கேட்டிருக்கவேண்டும்,

உடனே ஓடி வந்து பார்த்தான். இளம் பெண் ஒருத்தி நீரோடு செல்லுதலையும் நாங்கள் தவிப்பதையும் கண்டான். துடுமென்று அந்தக் கடும் புனலிலே பாய்ந்தான்.

நீரிலே கால் அண்டாமல் தளர்ந்து போய்க் கொண்டிருந்த தலைவியைப் பற்றி அணைத்துக் கொண்டான். மெல்ல இழுத்துக் கொண்டு வந்து கரையேற்றினான். அப்போதுதான் எங்களுக்கு உயிர் வந்தது. அவன் எத்தனை அழகாக இருந்தான்! தன் விரிந்த மார்பில் நீண்ட சுரபுன்னை மாலையை அணிந்திருந்தான். ஒரு நாட்டுக்குத் தலைவனென்று தோன்றியது. அவன் அழகை வியப்பதா? அவன் வந்த வேகத்தை வியப்பதா? அவன் வேகமாகப் பாய்ந்த போது அவன் அணிந்திருந்த நீள் நாகநறுந்தண்டார் இங்கும் அங்கும் அலைந்து விளங்கியது. ஒரு மெல்லியல் நீரோடு போகிறாளே என்ற கருணையினால், தனக்கு யாது நேரினும் சரியென்று அவ்வளவு வேகமாகப் பாய்ந்தானே; அந்த அருளை என்னென்பது?

செவிலி : நீங்கள் எல்லோரும் அவனைப் பார்த்தீர்களா?

தோழி : எங்கள் கண்களால் நன்றாகக் கண்டோம். முதலில் எங்கள் உயிரே போய்விட்டது போல உணர்வற்று நின்றோம் நாங்கள். அப்போது அவன் நீர்க்குள் பாய்ந்து அவளுடைய பூண் அணிந்த மார்பை இறுகத் தழுவியபடியே கரையிலே கொண்டு வந்து சேர்த்தான். அவனுடைய அகன்ற மார்பில் அவள் மார்பில் எழுந்த நகில்கள் இணைந்து பொருந்தின. இதை யாவரும் பார்த்தோம். அவ்விருவரையும் அந்த நிலையில் பார்த்தபோது ஒருவருக்காகவே மற்றவர் படைக்கப்பட்டவரென்று தோன்றியது. எங்களிடம் உண்டாகியிருந்த அச்சம்போய்

வியப்பு உண்டாயிற்று. தோழிமார் பலரும் அந்த நிலையில் அவர்களைப் பார்த்து வியப்பே வடிவமாக நின்றார்கள். 'இவளுடைய உயிரை மீட்டுக் கரையேற் றினான் இந்தப் பெருமான். இறைவனுடைய திருவ ருளே இந்த நிகழ்ச்சியை நிகழச் செய்தது போலும்! இவளுடைய உயிருக்கு இடையூறாக வந்த புனல், இவளுக்கு உயிர்க்குயிராகிய தலைவன் ஒருவனைத் தந் தது' என்ற நினைவே எங்கள் உள்ளத்தில் எழுந்தது. மற்றத் தோழிமார்கள் இதையே சொல்லிக் கொண் டிருக்கிறார்கள். இது ஊரிலும் பரவிவிட்டது.

செவிலி : எனக்குத் தெரியாதே!

தோழி : உங்களுக்கும் தெரிந்திருக்கலாம் என்று எண்ணி யிருந்தேன். ஆனால் சில நாட்களுக்கு முன்தான், இந்த உண்மை உங்களுக்குத் தெரியாது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

செவிலி : எப்படித் தெரிந்து கொண்டாய்?

தோழி : தலைவி நீரில் ஆழாமல் எடுத்து உயிர் கொடுத்துக் காதற் கடலில் ஆழ்த்திய அந்தத் தலைவர் அன்று இவளை மணம் பேசச் சான்றோரை விடுத்தார். அவர் கள் வேண்டுகோளை நீங்கள் மறுத்து விட்டீர்கள். அப்போதுதான் உங்கள் அறியாமை எனக்குத் தெரிந் தது. இவள் இன்னும் கன்னியென்று நீங்கள் நினைத் திருப்பதை மாற்றவேண்டும் என்று தோன்றியது. இவள் அருமழை தரல் வேண்டின் தரும் ஆற்றல் உடைய பெருமையினள் என்பதைக் காரணத்துடன் சொல்லத் துணிவு கொண்டேன்.

காமர் கடும்புனல் கலந்து எம்மோடு ஆடுவாள்,
தாமரைக்கண் புதைத்துஅஞ்சித் தளர்ந்து
அதனோடு ஒழுகலால்,

நீள்நாக நறுந்தண்தார் தயங்கப்பாய்ந்து அருளினுல்
பூண் ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன்அகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனுல், என்தோழி
அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே.

[ அழகும் வேகமும் உடைய நீரில் எம்மோடு கூடி விளையாடப் புகுந்த தலைவி, கால் தளர்ந்து தன் தாமரை போன்ற கண்களை அச்சத்தால் பொத்திக்கொண்டு அந்த நீரோடு போகையினுல், நீண்ட சுரபுன்னை மலரால் தொடுத்த குளிர்ச்சியான மாலையானது விளங்கும்படி அந்நீரிலே பாய்ந்து, அருளினுல் அவளுடைய அணியை அணிந்த மார்பை இறுகத் தழுவிக் கரைக்கு வந்தவனுடைய அகன்ற மார்பை அவளுடைய எழுந்து வளரும் நகில்கள் அணைந்தன என்ற செய்தியால், என் தோழியாகிய அவள் அரிதாகிப் போன மழையைத் தருதலை நாம் வேண்டினுல்உடனே தரும் ஆற்றல் பெற்ற சிறப்பை உடையவளானுள்.

ஒரு தலைவனிடம் காதல்கொண்டு அவனையன்றிப் பிற தெய்வத்தைத் தொழாத கற்புடையாள் ஆனுள் என்பது கருத்து.

காமர்—அழகு; விருப்பம் என்றும் சொல்லலாம். கடும் புனல்-வேகமான நீர்; கடுமையான நீர் என்பதும் பொருந்தும். புதைத்து—மூடி. தளர்ந்து—சோர்வுற்று. ஒழுகலால்—போதலால். நாகம்—சுரபுன்னை. தார்—மார்பில் அணியும் மாலை. தயங்க—விளங்க. ஆகம்-மார்பு. உற—இறுக. தழீஇ—தழுவி. போதந்தான்—வந்தான். அகன்:அகல் என்பதன் விகாரம். தருகிற்கும்—தரும் வன்மை படைத்த. ]

இவ்வாறு அவள் கூறவே, செவிலி தலைவன் செய்ததை எண்ணி மனத்துக்குள் உவகை பூத்தாள். தன் மகளின் உயிரைப் பாதுகாத்தவன் அவன் என்ற நல்ல எண்ணம் உண்டாயிற்று. ஆனுல் உயிர்காத்த செயலும்,

வீரமும், அருளும் மாத்திரம் இருந்தால் போதுமா? அவனுடைய குலம், கோத்திரம் ஒன்றும் தெரியவேண்டாமா? ஆகவே அவள் தோழியிடம் கேட்கலானாள்.

செவிலி : அவன் யார்? அவன் எங்கே வாழ்பவன்? எந்தக் குடியிற் பிறந்தவன்?

தோழி : நம்மினும் உயர்குடித் தோன்றல் என்றே சொல்லவேண்டும். பரம்பரையாக நாட்டுரிமை பூண்ட குலத்தில் உதித்தவர் அவர். கானம் அகன்ற மலைநாட்டை உடைய குரிசிலுடைய திருமகனார் அவர்.

செவிலி : நம் நாட்டைப்போன்ற குறிஞ்சி நிலத்தை உடையவனா?

தோழி : ஆம், அவர் நாட்டில் மலைச்சாரலில் தினையை விளைவிப்பார்கள். தினையைக் காவல் காக்கப் பரண் போட்டு அதன்மேல் மகளிரை இருத்திக் காவல்புரியச் செய்வார்கள். பகலெல்லாம் அவர்கள் கிளி கடிந்து காப்பார்கள். இரவில் காவற்காரர்கள் அங்கே இருந்து காப்பார்கள். யானை முதலியன வராமல் இருப்பதற்காக அகிற் கட்டைகளைக் கொளுத்திப் பரண்மேலே வைத்திருப்பார்கள். அந்த அகில் எரிந்து உண்டாக்கிய புகை எங்கும் பரந்து படரும். ஏனற் புனத்தின் இதணில் (பரணில்) எரித்த அந்த அகிற்புகை மேலே மண்டிச் செல்லும். அந்தப் புகையால் சந்திரன் மூடுண்டு மங்கித் தோன்றும். வானிலே இயங்கும் மதியம் மலையைச் சார்ந்து ஒளி மழுங்கித் தோன்றும் போது, அங்குள்ள மக்கள் அதை நன்றாக முதிர்ந்த தேன் அடையென்று எண்ணி அதை எடுப்பதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்வார்கள். மூங்கில்களை வெட்டி அதன் கணுக்களையே படியாகக்கொண்டு

ஏறும் கண்ணேணிகளேயும் மற்றவற்றையும் அமைத்து ஆயத்தமாயிருப்பார்கள்.

எவ்வளவு உயர்ந்த பொருளாக இருந்தாலும் தனக்கு அகப்பட வேண்டுமென்று விரும்புவது மனிதன் இயல்பு. இந்தத் தலைவர் எளிதிலே நமக்குக் கிடைப்பவராகத் தோன்றவில்லை. புகையுண்ட மதியத்தைப்போல அவர் நாங்கள் இருக்குமிடத்தே வந்து நீரிலே பாய்ந்தார். அந்தச் செய்கையால் அவர் நமக்கு எளியவரானார். இயல்பாக அவர் நம்மினும் உயர்குடிப் பிறந்தவரே.

அவனுந்தான்,
ஏனல் இதணத்து அகிற்புகை உண்டுஇயங்கும்
வான்ஊர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறுல்என ஏணி இழைத்திருக்கும்
கான்அகல் நாடன் மகன்.

[ அந்தக் தலைவனும் தினைப்புனத்தில் உள்ள பரணில் எரித்த அகிலின் புகையினால் மூடப்பட்டு வானில் திரியும் முழுமதியானது மலையைச் சேரும்போது அதனை அந்த மலையில் உள்ள தேன் அடையென்று எண்ணி, அவ்விடத்து மக்கள்கண்ணேணியை அமைத்து, விடியட்டும் என்று காத் திருக்கிற, காடுகள் அகன்ற மலைநாட்டை உடையவன் மகன்.

அவள் இத்தகையவள் என்று முன்பு கூறி முடித்தாள். ஆகையால், அவனுந்தான் என்று உம்மை கொடுத்துச் சொல்கிறாள். ஏனல்—தினை; இங்கே தினைப்புனம். இதணம்— பரண். உண்டு—உண்ணப்பட்டு; மூடப்பெற்று. இயங்கும்— செல்லும். மதியம்—பூர்ண சந்திரன். அவ் வரை—அந்த மலையில். தேனின் இறுல்-தேன் அடை. இழைத்தல்-செய் தல். கான்—காடு.

'மிக்க ஒளியினையுடைய மதி புகையால் மாசுண்ட தன்மை பற்றித் தம் கையகப்படுத்திப் பயன்கொள்ளக் கருதும் நாடன் என, புகழ் மிக்க தலைவனும் புனலிடைத் தழுவிப் போந்ததனால் சிறிது புகழ் குறைந்தமை பற்றி யாமும் அவன் வரைந்து கொள்ளக் கருதுகின்றோம் என உள்ளுறை யுவமம் கொள்க' என்று நச்சினார்க்கினியர் எழுதுவர்.]

தோழி இதோடு நிற்கவில்லை. தலைவன் தலைவியை மணந்துகொள்ள வேண்டித் தக்கவர்களை அனுப்பிய பொழுது தலைவியின் தமர் உடம்படவில்லை. இது அறத்துக்கு மாறானது. மகளிரது கற்பைக் காப்பாற்றுவது நல்லோர் கடமை. அக்கற்புக்கு இழுக்கு வரும்படி செய்வதினும் பழியும் பாவமும் தரும் செயல் வேறு இல்லை. அதனால் பல தீங்குகள் நேரும். இதைத் தோழி எடுத்துரைக்க விரும்பினாள். ஊரில் உள்ளார் எல்லோர் மேலும் பிழையை ஏற்றிச் சொல்லப் புகுந்தாள்.

தோழி: இந்த மலைநாட்டுச் சிறுகுடியாகிய இவ்வூரினருக்கே சொல்கிறேன். அவர்கள் தகாத காரியங்கள் செய்தல் கூடாது. சிறுகுடியில் உள்ளவர்களே, கேளுங்கள். மலையில் வாழும் மக்கள் அறமல்லாத செயலைச் செய்தால் வரும் கேடுகளைச் சொல்கிறேன்.

செவிலி: அறமல்லாத செயல் என்று எதனைக் கூறுகிறாய்?

தோழி: நீரில் ஆழ்ந்து உயிர் போகாமல் பாதுகாத்த ஒரு தலைவருக்குத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்த ஒரு பெண்ணை மணம் செய்து அளிக்க மறுப்பது அறமல்லாத செயல் அல்லவா? அதற்குரிய விளைவு என்னவென்று நினைத்தாலே அச்சம் உண்டாகிறது. மலைவாழ்நர் அல்லவற்றைப் புரிந்து ஒழுகுவதனால்

அவர்கள் நாட்டில் பஞ்சம் வந்துவிடுமாம். உணவுப் பொருள்கள் விளையா. வள்ளிக்கிழங்கு நிலத்துக்குள் சென்று பருத்துப் பயன் தராது. மலையின்மேல் வண்டுகள் தேன் அடையை வைக்காவாம். கொல்லை யில் தினைப்பயிர் கதிர்விட்டு விளையாவாம். இயற்கை யாக விளையும் கிழங்கும் தேனும் இல்லாமற் போவ தோடு, உழுது பயிர்செய்த தினைகூட விளையாமல் போய்விடும். எல்லாம், கற்புடைய மகளிர் கருத்து அழியும்படி செய்வதனால் உண்டாகும் பயன்கள்.

சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!
வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;
கொல்லை குரல்வாங்கி ஈனா; மலைவாழ்நர்
அல்ல புரிந்து ஒழுக லான்.

[சிறுகுடியில் உள்ளவர்களே, சிறுகுடியில் உள்ளவர் வர்களே, வள்ளிக்கிழங்குகள் நிலத்துக்கடியில் பருத்து விளையா; மலையின்மேல் தேனடைகள் தொடுக்கப் பெறா; தினைக் கொல்லையில் தினைப்பயிர் கதிர்விட்டு விளையா; மலையில் வாழ்பவர்கள் அறம் அல்லாதவற்றைச் செய்து ஒழுகுவதனாலே.

சிறுகுடி—மலைப்பக்கத்து ஊர். வள்ளி – ஒருவகைக் கிழங்கு. வீழா: கிழங்கு பருத்து விளைதலை வீழ்தல் என்று சொல்வது மரபு. வரைமிசை-மலையின்மேல். தேன்—தேன் அடை. தொடா: அடுக்கடுக்காக வைப்பதனால் அதனைத் தொடுத்தல் என்று சொல்வார்கள். கொல்லை—தினை விளையும் நிலம். குரல்—கொத்து. வாங்கி—வெளிவிட்டு. ஈனா—விளையா அல்ல—அறமல்லாத பாவச் செயல்களை; தலைவனுடைய வரவை மறுத்ததைக் குறிப்பாகத் தோழி சுட்டிக் காட்டுகிறாள். ஒழுகலான்—நடத்தலால்.

'நீங்கள் பெரிய பிழையைச் செய்துவிட்டீர்கள். அறத்துக்கு மாறான செயலைச் செய்தீர்கள். இதனால் இந்த நாட்டுக்கே துன்பம் உண்டாகிவிடும். உண்ணும் உணவின்றித் தவிக்க நேரிடும். நீங்கள் செய்த பிழைச்குப் பரிகாரம் செய்யாவிட்டால் மலைவாணர் வாழ்வு இன்னலுக்குள்ளாகிவிடும்' என்று தோழி சொல்லாமற் சொல்லிவிட்டாள்.]

*

செவிலி ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

தோழி : இவ்வளவு காலமும் இந்த நாட்டில் மழைபெய்து எல்லாம் நன்கு விளைந்துவருகின்றன. அப்படி எப்போதேனும் சிறிது விளைவு குன்றுமானாலும் நம்முடைய அண்ணன்மார் வேட்டையாடி உணவு பெற்றுத் தருகிறார்கள். அவர்களுடைய வேட்டை பலிப்பதற்கும் காரணம் மகளிருடைய கற்புத்தான்; அவர்களுடைய வீரம் மாத்திரம் தனிக்காரணம் அல்ல.

செவிலி ; அம்பை ஆராய்ந்து குறிபார்த்து எய்யும் திறமையினால் இவ்வூர் மைந்தர்கள் வேட்டையில் வெற்றி பெறுகிறார்கள். அப்படி அன்று என்று நீ சொல்லுகிறாயே.

தோழி : வேட்டைக்குச் செல்பவர்கள் எல்லோரும் தாம் வேண்டிய பொருளைப் பெற்று வருவது இல்லை. இந்த நாட்டில் வேட்டை தப்புவதில்லை என்றால் அதற்குக் கற்புடைய மகளிரே காரணம். நம்முடைய மலை இயற்கை வளத்தால் மிக அழகாக இருக்கிறது. எங்கே பார்த்தாலும் மரமும் செடியும் கொடியும் பச்சைப் பசேலென்று வளர்ந்திருக்கின்றன. காந்தள் வளர்ந்து கொத்துக் கொத்தாக மலர்ந்து மணக்கிறது. இந்த அழகிய பெரிய மலையை,

வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே இருக்கலாம். இதன் பேரழகு நம் கண்ணை இழுத்துத் தன்னிடம் சிக்க வைத்து விடுகிறது. இங்கே வாழும் குறமகளிருடைய அழகைத்தான் என் சொல்வேன்! வளப்பம் அமைந்த திருமேனி உடையவர்கள் அவர்கள். தங்கள் விருப்பத்துக்கு ஏற்ற காதலரை மணந்து வாழ்கிறார்கள். காதலர் தழுவுவதால் அவர்களுடைய தோள்கள் பொலிவு பெற்று வளைந்த மூங்கிலைப் போலத் தோற்றுகின்றன; மென்மையை உடையனவாக விளங்குகின்றன. வாங்கு (வளைந்த) அமை (மூங்கில் போன்ற) மென்றோட் குறவர் மடமகளிர் அழகுடையவராக இருப்பதற்கும், சிலம்பு (மலை) கண்ணைப் பறிக்கும் அழகுடையதாக இருப்பதற்கும் அந்த மடமகளிருடைய ஒழுக்கமே காரணம். அவர்கள் தம் கணவன்மாரைத் தெய்வமாக வணங்குபவர்கள். அவர்கள் கண்ணை விழிக்கும் பொழுதே முதல் நினைவு உண்டாகிறது. அந்த நினைவு தம் கணவரை மனத்தால் தொழும் நினைவுதான். இந்த வழக்கம் ஒரு நாள் கூடத் தவறுவதில்லை. ஒரு நாளேனும் பிழைத்தலின்றித் தம்கேள்வரைத் தொழுது எழலால் அவர்களுடைய தமையன்மார் வேட்டைக்குச் செல்லும்போது அவர்கள் விடும் அம்புகள் தவறாமல் குறியை அடிக்கும் ஆற்றலைப் பெறுகின்றன. மடமகளிர்கேள்வரைத் தொழுது எழுவதில் பிழையார்; அவர் தமையன்மார் தாம் எய்யும் அம்பு குறியை அடிப்பதிலும் பிழையார்.

காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்
வாங்கு அமை மென்தோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த்தொழுதுஎழலால்;
தம்மையரும்
தாம்பிழையார் தாம்தொடுத்த கோல்.

[காந்தள் மலர் மணம் வீசுவதும் காண்பவர் கண்களை இழுத்துத் தன்பால் ஈடுபடுத்துவதும் ஆகிய பெரிய மலையில் உள்ள வளைந்த மூங்கிலைப் போன்ற மெல்லிய தோளையுடைய குறவருடைய மடப்பம் மிக்க பெண்கள் தாம் ஒரு நாளேனும் தவறுதவராய்த் தம் கணவரைத் தொழுத படியே துயிலினின்றும் எழுந்திருப்பதால், அவர்களுடைய தமையன்மாரும் தாம் எய்த அம்பு குறியை அடிப்பதினின்றும் தவறமாட்டார்கள்.

மகளிர் கற்புடையவராகி இருப்பதால் வேட்டையாடுபவர்களுக்கு வேட்டையில் நல்ல பயன் விளைகிறது என்றாள்.

கண் வாங்கு—கண்ணை இழுக்கும். இருஞ்சிலம்பு—பெரியமலை. வாங்கு அமை—வளைந்த மூங்கிலைப் போன்ற. பிழையார்-தவறுதவராகி. கேள்வர்—கணவர். எழுவதற்கு முன்பே மனம் இயங்கத் தொடங்குகிறது. பின் கண் விழிக்கிறது. பிறகு எழும் செயல் நிகழ்கிறது. மனம் இயங்குவதாகிய நினைவு தொடங்கும்போது கணவரைமனத்தால் தொழுதலின் தொழுது எழுவர் என்றாள். தம்மையர்—தமையன்மார். பிழையார்-தவறார். தொடுத்தல்-வில்லிலே வைத்து எய்தல். கோல்—அம்பு.

'மகளிர் கற்புக்கு இடையூறு நேர்ந்தால் இயற்கை விளைவு குன்றுவதோடு வேட்டையினால் வரும் பொருளும் கிடையாமற் போய்விடும்'* என்று தோன்றும்படி தோழி இதைச் சொன்னாள்.]

இப்படித் தோழி தன் தாயாகிய செவிலியிடம் உண்மையைச் சொன்னாள். உண்மையே எல்லா அறத்திலும்

*'விளைவு இன்றேல் வேட்டையாடியும் உணவு உண்டாக்குதும் என்று கருதில், அதுவும் தப்பும் என்றாள் என்றவாறு.'—நச்சினார்க்கினியர் உரை.

சிறந்தது. ஆதலின் உண்மையைச் சொன்னதன் வாயி லாகச் சிறந்த அறத்தோடு நின்ருள். அன்றி, தலைவியின் கற்பாகிய அறத்தைக் காப்பாற்றும் நெறியிலே அவ்வறத் துக்குச் சார்பாகவும் நின்ருள். இவ்வாறு தலைவி ஒரு தலைவனிடம் காதல் உடையவளாஞள் என்ற உண்மையை வெளிப்படுத்துவதஞல் உண்மையென்னும் அறமும், கற்பு என்னும் அறமும் பாதுகாக்கப் பெறுதலின், இத்தகைய கூற்றை அறத்தொடு நிற்றல் என்று தமிழ்ப் புலவர்கள் சொல்வார்கள்.

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்ருள். அதைக் கேட்ட செவிலி தலைவியைப் பெற்றவளாகிய நற்ருய்க்கு இதை அறிவித்தாள்; தோழி கூறியதாகச் சொன்ஞள். தோழி தலைவியோடு ஒன்றிப் பழகுகின்றவள் என்பதை நன்கு சிந்தித்துப் பார்த்த தாய் அச் செய்தியை மெல்லத் தலைவியின் தமையன்மாருக்குப் புலப்படுத்திஞள்.

இதனைத் தெரிந்து கொண்ட தோழி மேலே நிகழ்வ தனையும் கவனித்தாள். தமையன்மார் முதலில் சீறி எழுந் தாலும் பின்ஞலே சினம் ஆறிஞர்கள். 'இனித் தலைவர் இவளை மணந்துகொள்வதற்கு இடையூறு ஒன்றும் இல்லை' என்று தோழி ஆறுதல் பெற்ருள். இந்த இன்பச் செய்தி யைத் தலைவிக்குச் சொல்லப் புகுந்தாள்.

முதலில் தான் செவிலியிடம் கூறியவற்றை யெல் லாம் எடுத்துரைத்தாள். பின்பு, "இப்படி நான் அறத் தொடு நின்றேன். என் தாய் உன் தாய்க்கு அதைச் சொன்ஞள். அவள் அறத்தொடு நின்ற என் இயல்பை ஆராய்ந்து யான் கூறியது உண்மையாகவே இருக்கு மென்று கண்டு, எப்படிச் சொல்ல வேண்டுமோ அத் தகைய பக்குவத்தோடு நம் தமையன்மார்க்கு மெல்ல மெல்லச் சொல்லிப் புலப்படுத்திஞள்" என்ருள்.

என ஆங்கு
அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க்கு உய்த்து உரைத்தாள் யாய்

[என்று அப்படி என் தாய்க்கு அறத்தொடு நின்ற என் இயல்பையும் கூற்றையும் என் தாயால் தான் உணர்ந்த போது, நன்கு ஆராய்ந்து உணர்ந்து, நம் தமையன் மார்க்கு எந்த வகையில் சொன்னால் ஏற்குமோ அந்த வகையில் அமையும்படி, அவர் நெஞ்சிலே படும்படியாகச் செலுத்தி நம் தாய் சொன்னாள்.

ஆங்கு—அவ்வாறு; மேலே செவிலியிடம் சொன்ன படியைச் சுட்டியது. நின்றேனை—நின்ற என்னை. கண்டு—ஆராய்ந்து அறிந்து திறம்-வகை; என்றது, தமையன்மார் சினம் இன்றி ஏற்கும் வகையை. என்னையர்—தமையன்மார் தம் ஐயன் என்பதே தமையன் என வந்தது. உய்த்து—நெஞ்சிலே கதுவும் படி செலுத்தி. யாய்—நம் தாய்; என்றது நற்றாயை.]

தோழி நேரே நற்றாய்க்கு அறத்தொடு நிற்பதும், செவிலி தமையன்மாருக்கு அறத்தொடு நிற்பதும் மரபு அல்ல; ஆகவே தோழி செவிலிக்குச் சொல்ல, அவள் நற்றாய்க்குச் சொல்ல, அவள் தமையன்மாருக்குச் சொன்னாள்.

தலைவி: நம் தமையன்மார் அன்னை கூறியதைக் கேட்ட வுடன் என்ன செய்தார்கள்?

தோழி: மறக்குடியிற் பிறந்த அவர்கள் அதை அப்படியே பொறுமையாகக் கேட்பார்களா? கேட்டவுடன் அவர்கள் கோபத்தால் துடி துடித்தார்கள். அவர் களுடைய கண்கள் அம்பைப் பார்த்தன; வில்லைப் பார்த்தன; கோபத்தாற் சிவந்தன. நெஞ்சம் புழுங் கியது. என்ன செய்யப் போகிறார்களோ என்று

அஞ்சும்படி இருந்தது அவர்கள் நிலை. மனம் வெதும்பி எழுந்தார்கள்.

தலைவி: பிறகு?

தோழி: நல்ல வேளை! இந்தக் கோலம் ஒரு முகூர்த்தந் தான் இருந்தது. பிறகு அவர்கள் கோபம் ஆறியது. சிறிது சிந்தித்தார்கள்; எதற்காகச் சினம் கொள்ள வேண்டும் என்று யோசித்தார்கள். நீ ஆற்றோடு போனது நீயாகச் செய்த தவறா? இல்லை. அப்படிப் போகும்போது அப்படியே உன்னைப் போகும்படி யாக விட்டு விடாமல் தண்ணீரிலே பாய்ந்து உன் உயிரைத் தலைவர் காப்பாற்றினாரே; அது பிழையா? அதுவும் இல்லை. நீ வேண்டுமென்று செய்யாமை யால் நீ செய்தது பிழையன்று. அவர் விரும்பி உன்னைக் காப்பாற்றினாலும் அப்படிச் செய்யாமல் இருந்தால் உன் உயிருக்கு ஏதம் வருமாதலால் அவர் செய்ததும் பிழையன்று. இவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்தார்கள். இருவரிடமும் பிழை இல்லை என்று உணர்ந்தார்கள்; அப்போது அவர் களுக்கே மனம் சுழன்றது. சினத்தால் என்ன காரியம் செய்ய இருந்தோம் என்று நாணம் உண்டாயிற்று. தம் தலையைக் கவிழ்த்துக் கொண்டார்கள். இனி அவர்களால் ஒரு தடையும் நிகழாது.

அவரும்
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உருத்து எழுந்து ஆறி,
''இருவர்கட் குற்றமும் இல்லையால்'' என்று
தெருமந்து சாய்த்தார் தலை.

[தாய் கூறியவற்றைக் கேட்ட அவர்களும் சினம் அடைந்து கூர்மையுடையனவா என்று ஆராய்ந்து எடுக் கும் அம்புகளைப் பார்த்து, வில்லையும் பார்த்து, கண்கள்

சிவந்து, ஒரு முகூர்த்தம் முழுவதும் மனம் வெதும்பித் துடிதுடித்து எழுந்து, அப்பால் அந்தச் சினம் ஆறி, "இருவர்களிடத்திலும் குற்றம் ஏதும் இல்லை" என்று சிந்தித்து, தாம் சினம் கொண்டமைக்காக மனம் கலங்கி நாணத்தால் தலையைச் சாய்த்தார்கள்.

தெரி கணை-ஆராய்ந்து எடுக்கும் அம்பு. சிலை—வில். சேந்து—சிவந்து. பகல்—முகூர்த்தம்; மூன்றே முக்கால் நாழிகை; ஒன்றரை மணி நேரம். உருத்து—புழுங்கி. தெருமந்து—மனம் சுழன்று]



தோழியும் தலைவியும் வீட்டுக்குப் புறம்பே மலைச் சாரற் சோலையில் இவற்றைப் பேசிகொண்டிருக்கிறார்கள். தோழி தான் அறத்தொடு நின்றது முதல் தமையன்மார் அறிந்தது வரையில் சொன்னாள். குறிஞ்சிநில மக்கள் ஏதேனும் நல்ல காரியம் செய்யுமுன்னர்த் தம்முடைய நிலத்துக் கடவுளாகிய முருகனை வழிபடுவது வழக்கம். வழிபடுவதோடு குரவைக் கூத்து ஆடிப் பாடுவார்கள். இனி மேல் தலைவனுக்கும் தலைவிக்கும் மணம் நிகழும் என்ற நம்பிக்கை தோழிக்கு உண்டாயிற்று. ஆயினும் இதை முற்ற முடிக்கும்படியாக மலையுறை தெய்வமாகிய முருகக் கடவுளை வேண்டிக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது.

தோழி : ஆராய்ந்து எடுத்த அணிகளை நீ அணிந்துகொண்டிருக்கிறாய். இவ்வளவும் பயன்பட வேண்டுமாயின் நீயும் நின் தலைவனும் நாடவர் அறிய நன்மணம் புணர வேண்டும். அப்படிப் புணரும் பொருட்டு வரையுறை தெய்வத்தின் திருவருளைப் பெறவேண்டும். அத் தெய்வத்தின் திருவுள்ளம் மகிழும்படி நாமும் மற்றத் தோழிமாரும் மனம் உவந்து குரவைக்

கூத்தை ஆடலாம் வா; அப்படி ஆடும் குரவைக் கூத்தில் நீ கொண்டுநிலைப்பாட்டைப் பாடுவாயாக.

தெரியிழாய்! நீயும்நின் கேளும் புணர
வரைஉறை தெய்வம் உவப்ப உவந்து
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுள்
கொண்டு நிலைபாடிக் காண்.

[ஆராய்ந்து எடுத்து அணிந்த இழைகளை உடையவளே, நீயும் நின் காதலனும் மணம் புணரும்படியாக, மலையில் உறைகின்ற தெய்வமாகிய முருகன் திருவுள்ளம் உவக்கும்படி, நாம் மகிழ்ந்து குரவைக் கூத்தைக் கைகோத்துக் கொண்டு ஆட, அந்தக் குரவைக்கூத்தில் முதலில் ஒருவர் பாட, அதைத் தொடுத்துப் பாடும் கொண்டுநிலைப் பாட்டை நீ பாடுவாயாக.

தெரியிழை: அன்மொழித்தொகை; தெரியிழாய் என்பது அதன் விளி. கேள்–கணவன். புணர–ஒன்றுபட. வரை–மலை. உறை–வாழும். உவப்ப–மகிழ. குரவைக்கூத்து என்பது கையைக் கோத்துக்கொண்டு சுற்றிச் சுற்றி வந்து ஆடும் ஒருவகைக்கூத்து. குறிஞ்சி நிலத்தவர் ஆடும் குன்றக் குரவையையே இங்கே கொள்ளவேண்டும். முல்லை நிலத்து மகளிரும் குரவை கூத்து ஆடுவதுண்டு. தழீஇ-தழுவி; கை கோத்துக் கொண்டு. கொண்டு நிலை; 'ஒருவர் கூற்றினை ஒருவர் கொண்டு கூறுதலிற் கொண்டுநிலையாயிற்று' என்பது நச்சினார்க்கினியர் உரை. பாடிக்காண்: காண் என்பது துணைவினை; அதற்குத் தனியே பொருள் இல்லை; பாடு என்பதே பொருள்.]

★

தோழி மணம் நிகழும் என்று சொல்லவே, தலைவி அந்த இனிய நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்கிறாள். பல பேருக்கு நடுவில் தலைவனோடு அமர்ந்திருப்பதை நினைக்கும் போது அவள் உடம்பு புளகம் போர்த்தது. அத்தனை

பேருக்கு நடுவில் அவனோடு வீற்றிருப்பதற்கு முடியாது போல் தோன்றியது. அவ்வளவு நாணம். 'எத்தனையோ இடங்களில் மணங்கள் நிகழ்கின்றனவே; அங்கெல்லாம் மகளிர் தம் மணாளரோடு பல பேருக்கு நடுவில் ஒன்றி வீற்றிருக்கிறார்களே! அவர்களுக்கு நாணம் இல்லையா? எப்படி அவர்கள் நாணத்தை அடக்கிக்கொண்டு அமர்ந் திருப்பார்கள்? நம்மால் முடியாதுபோல் இருக்கிறதே! அவர்கள் ஏதாவது நோன்பு நோற்று அத்தகைய ஆற்றலை பெற்றார்களோ!' தலைவி அதை நினைத்து நினைத்துக் கூசு கிறாள்.

தோழி: என்ன அப்படி மெய்சிலிர்க்கிறாயே!

தலைவி: நல்ல பெண்ணே, நீ சொன்னாயே திருமணத் தைப்பற்றி; அந்த நல்ல நாள் வரும்போது நம்மு டைய சுற்றத்தாரெல்லாம் சூழ இந்த நம் மலையிலே தலைவருடன் அமர்வதற்கு நாணம் இடம் கொடுக் காதுபோல் இருக்கிறதே! தம் நாணைத் தடுத்து நிறுத்தும் மகளிரும் இருக்கிறார்கள். அவர்கள் பாக்கிய சாலிகள். அவர்கள் என்ன நோன்பு நோற்றார்களோ, அறியேன்.

நல்லாய்,
நன்னாள் தலைவரும் எல்லை நமர்மலைத்
தம்நாண்தாம் தாங்குவார் என்நோற் றனர்கொல்?

[எனக்கு நல்ல தோழி, நீ சொன்ன அந்த நல்ல நாள் வரும்போது, நம்மவர்களுடைய மலையில் இத்தகைய சந் தர்ப்பத்தில் எழும் தம்முடைய நாணைத் தாமே தடுத்து நிறுத்தும் ஆற்றலுடைய மகளிர் என்ன நோன்பு நோற் றார்களோ?

நன்னாள் என்றது திருமண நாளை. தலைவரும்: தலை என் பது பொருளற்ற சொல்; வரும் என்பதே பொருள். வரும்

எல்லை—வரும்போது. தாங்குவார்—நாணத்தால்* எழுந்து ஓடிப்போகாமல் அதைத் தடுத்து அமர்வார். நோற்றனர் கொல்—நோன்பு செய்தார்களோ. இயல்பாக மகளிருக்குள்ள நாணத்தை அடக்கும் ஆற்றலைப் பெற மெய் வருந்தி நோன்பு நோற்றிருக்க வேண்டும் என்றாள் ]



தலைவி மகிழ்ச்சி மீதூர்ந்து பேசலானாள்.

தலைவி : கல்யாணம் நம்முடைய வீட்டில்தானே நடைபெறும்? வேங்கை பூத்து நிற்கிறது. அது நம்முடைய மணத்துக்குரிய நாள் இதுவென்று சொல்வது போல இருக்கிறது. இதுகாறும் தினைப்புனத்தில் என் காதலரைக் கண்டு அளவளாவி வந்தேன் அங்கே வேங்கை மரம் தன் பூந்தாதினைக் கீழே உதிர்க்க, கீழிருந்த பாறையில் அது பரந்து அப் பாறைக்குப் பொன் மெருகிட்டாற் போல விளங்கும். அந்தப் பாறையாகிய முற்றத்திலே உண்மையாக நான் என் தலைவரோடு ஒன்றுபட்டேன். அதுவெறும் கனவல்ல; நனவிலே நிகழ்ந்த புணர்ச்சி, எம்பெருமானோடு புனவேங்கையின் தாது உதிரும் பொன்னிறப் பாறை முன்றிலில் நனவிலே நிகழ்ந்த புணர்ச்சி இங்கே தம் வீட்டிலே இனி நிகழும் அல்லவா?

தோழி : இனி நாடு அறிய நீயும் அவரும் மனைவியும் கணவரும் ஆனபின்பு இல்லத்திலே இணைந்து இன்புறுவதில் என்ன ஐயப்பாடு?

தலைவி : அவரைக் காணாமல் வீட்டுக்குள் அடைபட்டுக் கிடந்த காலத்திலெல்லாம் அவரைக் கண்டு குலாவு

---

* 'சுற்றத்தாரிடை வரைதலாற் பிறந்த நாண் தாங்கல் அரிதென்றாள்.'; — நச்சினார்க்கினியர் உரை.

வது போலக் கனவு காண்பேன். திடீரென்று கனவு குலைந்து விழித்தால், கண்டது கனவென்பது தெளிந்து, படாத பாடுபடுவேன். இனிமேல் நனவிலே நிகழும் புணர்ச்சி நிகழுமென்கிறாய். அப்படியானால் அந்தப் பழைய கனவிலே தோன்றும் புணர்ச்சியைப் போக்கி விடலாம்; அப்படித்தான் அல்லவா?

தோழி : ஆம்.

தலைவி : நனவிற் புணர்ச்சி நடக்கலும், அப்போதே கனவிற் புணர்ச்சியை வேண்டமாட்டோம்; அல்லவா?

புனவேங்கைத் தாதுஉறைக்கும் பொன் அறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ?
நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ?

[தினைப்புனத்தில் வேங்கை மலரின் தாது கீழே உதிரும் பொன்னிறம் பெற்ற பாறையாகிய முற்றத்தில், நனவிலே நடந்த புணர்ச்சி இங்கே நடக்கும் அல்லவா? அவ்வாறு நனவிலே நடக்கும் புணர்ச்சி இங்கே நிகழ்ந்தவுடன் அப்போதே, இதுகாறும் நிகழ்ந்த கனவிலே காணும் புணர்ச்சியை விரும்பாமல் போக்கிவிடுவோம் அல்லவா?

இனிமேல் எப்போதும் இல்லத்தில் தலைவனுடன் இருந்து வாழலாமென்றும், முன்போல் அவனைக் காணுமல் கனவிலே கண்டு கலங்குவதற்கு அவசியம் இல்லையென்றும் சொன்னாள்.

புனம்—தினைக்கொல்லை. உறைக்கும்—உதிரும். அறை—பாறை. முன்றில்—முற்றம்; முன்னிடம். நனவில்புணர்ச்சி—நனவிலே உண்மையாக நிகழும் புணர்ச்சி. நடக்குமாம்:

ஆம், அசைநிலை. நடக்கலும்* ஆங்கே—நடந்தவுடன் அப்போதே. கடிதும்—போக்குவோம்; விரும்பமாட்டோம். ஆம்: அசைநிலை.]

*

தோழி தலைவியின் பெருமகிழ்ச்சியைக் கண்டு பூரித்தாள்.

தோழி : தலைவருடன் நீ அமரும்போது நீ எப்படி இருக்க வேண்டும் தெரியுமா? தலைவரை நீ முன்பு அறியாத வளைப் போலவும், பழகாதவளைப் போலவும் இருக்க வேண்டும். அவரும் அப்படியே உன்னை முன்பு அறியாதவளைப் போலவே பழகுவார். நாலு பேருக்கு நடுவில் இப்படி நீங்கள் நடப்பீர்கள் அல்லவா?

தலைவி : ஆம்; அப்படித்தானே இருக்க வேண்டும்?

தோழி : நான் என்ன செய்ய வேண்டும் தெரியுமா? நீங்கள் ஒருவருக்கு ஒருவர் புதியவரைப் போல நடந்துகொள் வதைப் பார்த்தால் எனக்குச் சிரிப்பு வரும்; வியப்பும் உண்டாகும். ஆனால் அவற்றை நான் வெளிப்படை யாகக் காட்டிக் கொள்ளமாட்டேன். பண்டு அறியாதீர் போல் நடந்துகொள்ளும் உங்கள் பழங்கேண்மையைச் சிறிதும் அறியாதவளைப் போலவே நான் நடப்பேன். எனக்குத் தெரிந்தவற்றையெல்லாம் மறைத்து, நானும் தலைவரைத் தெரியாதவளைப் போலவும் உங்கள் உறவை அறியாதவளைப் போலவும் இருக்க வேண்டும். அப்படி இருப்பேனா? உனக்கு என்ன தோன்றுகிறது?

*'உம் மிற்று வினையெச்சம் விரைவு தோன்ற நின்றது.'- நச்சினார்க்கினியர்.

$ 'நனவினும் புணர்ச்சி, கனவினும் புணர்ச்சியென ஆம் என்பவற்றைக் கூட்டுக.'—நச்சினார்க்கினியர்.

தலைவி : நாங்கள் பண்டு அறியாதார் போல இருப்பது தான் நலம். அப்படியே நீயும் கண்டறியாதவளைப் போலக் கரப்பதுதான் நலம்.

தோழி : ஆம். அப்படித்தான் செய்யவேண்டும். விண்ணளவும் உயர்ந்து நிற்கும் மலைநாடரும் நீயும் கல்யாணத்தில் எப்படி நடக்கிறீர்களோ! பார்க்கலாம். நானும் எப்படி நடந்து கொள்கிறேனோ! பார்க்கலாம்.

விண்தோய்கல் நாடனும் நீயும் வதுவையுள்
பண்டுஅறியா தீர்போல் படர்கிற்பீர் மற்கொலோ?
பண்டு அறியா தீர்போல் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டு அறியர தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ?

[வானத்தைத் தொடும் மலைநாடனும் நீயும் செய்து கொள்ளும் மனத்தில் முன்பு அறியாதவர்களைப் போல நீங்கள் மிகவும் பக்குவமாக நடப்பீர்களோ? முன்பு அறியாதவர்களைப்போல் நடக்கும் உங்களுடைய பழைய தொடர்பைக் கண்டறியாதவளைப் போல நான் மிகவும் மறைக்கும்ஆற்றல்பெறுவேனோ?]

விண்-வானம். கல்-மலை. வதுவை—மணம். படர்கிற்பீர்-நடந்து கொள்வீர்கள். மன்: மிகுதியைக் காட்டும் இடைச் சொல். கொல்: அசைநிலை; பொருளற்ற சொல். கேண்மை—நட்பு. கரக்கிற் பென்மற்கொலோ—நன்றாக மறைக்கும் வன்மை உடையேனாவேனோ? கில் என்பது ஆற்றலை உணர்த்த வரும் இடைச்சொல். ஓ என்பது ஐயத்தைப் புலப்படுத்தியது.]



மேலும் தோழி பேசுகிறாள் :

தோழி : அவருடைய மலையில் நல்லவர்கள் வாழ்கிறார்கள். அதனால் எப்போதும் மழையினால் குறைவில்லாத மலை அது. கறுத்த மேகங்கள் அதன்மேல் தவழ்ந்து கொண்டே இருக்கும். மைதவழும் வெற்பையுடைய தலைவர் மணக்க வருவார். அவருடைய மணக் கோலத்தை என்னுடைய கண்களால் மொண்டு உண்பேன். அந்த மண அணியைக் காணாமல் நாணத்தால் கண்ணைக் கையினால் பொத்திக் கொள்ளும் கண்களும் கண்களாகுமா? கண்ணை மலர விழித்துக் காணும் பேறுடையோம்'யானும் பிற தோழிமாரும்.

மைதவழ் வெற்பன் மணஅணி காணாமல்
கையாற் புதைபெறும் கண்களும் கண்களோ?

[கருமேகம் தவழ்கின்ற மலையை உடையவனது திருமண அலங்காரத்தைக் காணாமல், நாணம் காரணமாகக் கைகளால் பொத்தப்பெறும் கண்களும் கண்களாகுமா?

மை-மேகம். புதைபெறும்—மூடப்பெறும்.]

தலைவி நாணத்தால் தலைவனை மணக்கோலத்தில் காணக் கூசுவாள் என்பதை நினைந்தே தோழி இப்படிக் கூறினாள். அவள் தன்னையே குறிப்பிடுகிறாள் என்பதைத் தலைவி தெரிந்துகொண்டாள். ஆகவே, அவளுக்கு ஏற்ற விடை கூறவேண்டுமென்று நினைந்தாள். கூறுகிறாள்

தலைவி : நானும் நீயும் வேற்றுமையில்லாமல் இருக்கிறோம். என் உள்ளத்தை நீ அறிவாய்; ஆகவே; நீ காண்பதும் நான் காண்பதும் ஒன்றுதான். மணவணி காணாமல் மூடப்பெறும் கண்களும் கண்களோ என்று சொல்கிறாயே! ஏன் அவ்வாறு சொல்கிறாய்? நான் நின் கண்ணால் மிகுதியாகக் காண்பேன். நான் தனியாகக் காண வேண்டும் என்பது இல்லையே!

என்னைமண்?
நின்கண்ணாற் காண்பென்மன் யான்.

[ஏன் இப்படிச் சொல்கிறாய்? உன் கண்களையே என் கண்களாகக் கொண்டு நின் கண்களால் மிகவும் யான் கண்டு மகிழ்வேன்.

என்னை—ஏன். மன்: அசை. காண்பென்—காணுவேன். மன்: மிகுதியைக் குறித்தது.]

தோழி: அப்படியா! உன் அழகிய கண்களைக் கண்டு கண்டு நாங்களெல்லாம் வியந்து பாராட்டுகிறோம். பிறர் பார்த்துப் பொறாமை கொள்ளும் வண்ணம் அழகு பொங்குவன உன் கண்கள்; மையுண்ட அக் கண்கள் நெய்தல் இதழைப் போல இருக்கின்றன. நீ என் கண்ணால் காண்பதாகச் சொன்னாய் அல்லவா? அப்படியானால் என் கண்கள் நின் அழகிய கண்களா கட்டும். நான் இதை மிகுதியாக விரும்புகிறேன்.
நெய்தல் இதழ்உண்கண் நின்கண்ஆ கென்கண்மன

[நெய்தற் பூவின் இதழைப் போன்ற மையுண்ட கண் களாகிய நின் கண்களாக என் கண்கள் மிகவும் ஆகுக.

உண்கண்—மை உண்ட கண்கள். ஆக என்கண் என்பன விகாரமாகி, ஆகென்கண் என நின்றன. மன-மன்ன; மிகுதியாக.]

தன் கண்ணைத் தோழி புகழவே தலைவி நாண மிகுதி யால் தலையைச் சாய்த்து மேலே பேசாமல் மௌனமாக நின்றாள்.

★

இவ்வாறு அவ்விருவரும் பேசிக்கொண்டிருந்ததை அங்கே வந்து மறைவில் நின்றிருந்த தலைவன் கவனித் தான். தோழி அறத்தொடு நின்றதையும் தலைவி

யைச் சார்ந்தோர் உடம்பாட்டுக் குறிப்புடன் இருப் பதையும் அவன் உணர்ந்து மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந் தான். உடனே தன் ஊர் சென்று மீட்டும் மணம் பேசும் பொருட்டுப் பெரியோர்களை அனுப்பினான். தலைவியைச் சார்ந்தோர் உடம்படவே, அவனே தக்க பெரியோர்களையும் சோதிடனையும் அழைத்துக்கொண்டு பரிசப் பொருளுடன் மணம் புரிய ஏற்ற நிலையில் வந் தான். அவன் வரவே மணத்துக்குரிய முயற்சிகள் மிகச் சிறப்பாக நடைபெற்றன. அதைத் தோழி தலைவிக்குப் புலப்படுத்தினாள்.

தோழி : தலைவர் மணம் செய்வதற்குரிய நிலையில் வந் தார். மிக உயர்ந்த மலைக்குத் தலைவராகிய அவர் வருகையில் தம்முடன் சில அறிஞர்களை அழைத்து வந்திருக்கிறார்.

தலைவி : யார் யாரை அழைத்து வந்திருக்கிறார்?

தோழி : அவருடன் ஒரு சோதிடன் வந்திருக்கிறான். அந்தக் கணி மூன்று காலத்தையும் அளந்தறியும் அறிவனும். நல்ல நூல்களை ஆராய்ந்து அவற்றின் நெறியை அறிந்தவன். அவன் மணமக்கள் ஒன்றுபட்டுச் செறிவதற்கு ஏற்ற முகூர்த்தத்தை வைத்தால் அந்த முகூர்த்தம் நன்மை தருவதில் தவறாது. அந்தக் குறியாகிய நல்ல நேரம் மாறுதலை அடையாது. இது காறும் தான் வைத்த முகூர்த்தங்கள் திரிபு அறியாத அறிவன் அவன். அவனை முன்னிட்டுக்கொண்டு தலைவர் வந்திருக்கிறார்.

தலைவி : அந்த அறிவன் ஒருவன்தானா வந்திருக்கிறான்? சில அறிஞர்கள் வந்ததாகச் சொன்னாயே!

தோழி : ஆம். அறிவனோடு சான்றோர் சிலரைத் தமக்குச் சுற்றமாக அழைத்து வந்திருக்கிறார். அந்தச் சான் றவர் தகுதி மிக்கவர்கள். எதையேனும் எடுத்துச்

சொல்வதாக இருந்தால் எதைச் சுருக்கமாகத் தொகுத்துச் சொல்ல வேண்டுமென்பதும், எதை விளக்கமாக வகுத்துக்கூற வேண்டுமென்பதும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். தகை மிக்க வரும் தொகையும் வகையும் அறிபவருமாகிய சான்றவரையே இனமாகக் கொண்டு தலைவர் வந்தார். இனிமேல் நமக்கு ஒரு குறையும் இல்லை.

தலைவி : இதுவரையில் களவுக் காதலில் அவரை நெடும் பொழுது பிரிந்து வருந்தியிருந்தேனே! அதை நினைக்கையில் என் உள்ளம் கலங்குகிறது.

தோழி : நீ அந்தக் கலக்கத்தை விட்டுவிடு. இனி அவர் உன்னைப் பிரியமாட்டார். அவர் பிரிவதால் உன்பால் வந்து படர்ந்து பிறர் பழிகூறும்படி செய்த பசலையும் இனி நின்னை அணுகாது. மூங்கிலைப் போன்ற உன் மெல்லிய தோளிலே படர்ந்த பசலை நோய் புறத்தாருக்கு உன் காம நோயைப் புலப்படுத்திக்கொண்டு நின்றதே! இனி அந்த மென்றோட் பசலை நீங்கிவிடும். அந்தப் பசலையைக் கண்டு ஊரினர் தமக்குள்ளே கசமுசவென்று பேசிய வம்புச் சொற்களுக்கும் இனி இடம் இல்லை; அவையும் விடைபெற்றுக் கொள்ளும். இவை யாவற்றிற்கும் காரணமாகிய களவுக் காதலும் இனி நீங்கிவிடும். அவர் வருவாரோ வரமாட்டாரோ என்று பேதுறும்படி ஒருநிலை இல்லாமல் இருந்தது, அந்தக் காதல். நிலையில்லாத அந்த மாயப்புணர்ச்சியே இல்லையாகிவிடும். இவ்வாறு உன் வருத்தத்துக்குக் காரணமான பசலையும், ஊரினர் கூறும் அம்பலும் (வம்புப் பேச்சு), இவற்றிற்கு காரணமான மாயப் புணர்ச்சியும் ஒரேயடியாக ஒழியும்படியாகச் சேய் உயர் (நெடுக உயர்ந்த) வெற்பர் வந்தார். இனிமேல் நீ மனம் கலங்கிக் கண்ணீர் சிந்தி வருந்த வேண்டாம். உன் உள்ளத்தில் உவகை மிகுதியாகட்டும். அந்த உவகை உன் கண்களிலே ஒளிவிடும். தாமரைப்

பூவைப் போன்ற நின் அழகுடைய மையுண்ட கண்கள் விளக்கத்தை அடைவனவாகுக!

நெறிஅறி செறிகுறி புரிதிரிபு அறியா
அறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை அறியும்
சான்றவர் இனமாக
வேய்புரை மென்றோட் பசலையும் அம்பலும்
மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடன்நீங்கச்
சேய்உயர் வெற்பனும் வந்தனன்
பூஎழில் உண்கணும் பொலிகமா இனியே!

நல்ல நூல்களின் வழியாலே அறிந்த, மணமக்கள் பொருந்துவதற்கு ஏற்ற முகூர்த்தம் தவறுவதே அறியாத சோதிடனை முன்னிட்டுக்கொண்டு, தகுதிமிக்க, தொகுத்தலும் வகுத்தலும் அறியும் சான்றவர் தனக்கு உடன்வரும் உறவினராக இருப்ப, மூங்கிலைப் போன்ற உன்னுடைய மெல்லிய தோளில் உண்டாகும் பசலையும், ஊரினர் கூறும் பழிமொழியும், நிலையாமையையுடைய களவுப் புணர்ச்சியு மாகிய எல்லாம் ஒருங்கே நீங்கும்படியாக, நெடுந்தூரம் உயர்ந்த மலையையுடைய தலைவனும் நின்னை வரைந்து கொள்ளும் பொருட்டு வந்துவிட்டான். ஆதலின் பூவின் அழகையுடைய நின் மையுண்ட கண்களும் இனி விளக்கம் பெறுவனவாகுக.

நெறி—நூலின் வழி. செறி—இணைவதற்கு ஏற்ற. குறி—நல்லநேரம். புரி திரிபு அறியா—செய்யும் தவற்றை அறியாத; தவறாத என்றபடி. அறிவன்—சோதிடன். முந்துஉறீஇ—முன்னேவிட்டு; முன்னிட்டுக்கொண்டு. தகை—தகுதி; அழகு என்றும் கொள்ளலாம். தொகை—சுருக்குதல் வகை—பிரித்துச் சொல்லுதல். வேய்—மூங்கில். புரை—ஒக்கும். பசலை-மகளிருக்குப் பிரிவால் வரும் ஒருவகை நிறம்: இது பொன்னைப் போல மஞ்சள் நிறமுடையது; தேமலைப் போல வருவது. அம்பல்—ஊரினர் மறைவாகத் தமக்குள்ளே தலைவியைப் பற்றிப் பேசிக்கொள்ளும்

அவதூறு. மாயம்—பொய்; இங்கே நிலையாமையை உணர்த்தியது. களவுப் புணர்ச்சியில் தலைவி தலைவனைச் சந்திப்பது எப்போதும் நிச்சயமாக நிகழ்வதன்றாதலால் அது மாயப்புணர்ச்சியாயிற்று. உடன்—ஒருங்கு. சேய்—நீளமான; இங்கே நீளம் உயரத்தின் மிகுதியைக் குறித்து நின்றது. பொலிகமா; மா என்பது அசை. இனி—இப்பொழுது.]

இந்தப் பாட்டு முழுவதுமே தலைவன் வரைவொடு வந்தது கண்ட தோழி, தலைவிக்குக் கூறுவதாக அமைந்திருக்கிறது. தோழி தான் அறத்தொடு நின்றது முதல் தலைவன் மணமுயற்சியோடு வந்தது வரையிலுள்ள செய்திகளைச் சொல்கிறாள்.

காமர் கடும்புனல் கலந்தெம்மோடு ஆடுவாள்
தாமரைக்கண் புதைத்து அஞ்சித்
தளர்ந்து அதனோடு ஒழுகலால்
நீள்நாக நறுந்தண்டார் தயங்கப் பாய்ந்து அருளினால்
பூண் ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன் அகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனால் என்தோழி
அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே;
அவனுந்தான், ஏனல் இதணத்து அகிற்புகை
உண்டுஇயங்கும்
வான்ஊர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறால்என ஏணி இழைத்திருக்கும்
கான்அகல் நாடன் மகன்;
சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!
வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;
கொல்லை குரல்வாங்கி ஈனா; மலைவாழ்நர்
அல்ல புரிந்துஒழுக லான்;
காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதுஎழலால், தன்னையரும்
தாம்பிழையார் தாம்தொடுத்த கோல்;

என ஆங்கு,

அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க்கு உய்த்துரைத்தாள் யாய்;
அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபகல் எல்லாம் உருத்தெழுந்து ஆறி,
'இருவர்கட் குற்றமும் இல்லையால்' என்று
தெருமந்து சாய்த்தார் தலை;
தெரியிழாய்! நீயும்நின் கேளும்புணர
வரைஉறை தெய்வம் உவப்ப, உவந்து
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுள்
கொண்டு நிலைபாடிக் காண்;
நல்லாய், நன்றாள் தலைவரும் எல்லை நமர்மலைத்
தம்நாண்தாம் தாங்குவார் என்நோற் றனர்கொல்!
புனவேங்கைத் தாதுஉறைக்கும் பொன்அறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமாம் அன்றே?
நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமாம் அன்றே?
விண்தோய்கல் நாடனும் நீயும் வதுவையுள்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ?
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ?
மைதவழ் வெற்பன் மணஅணி காணமல்
கையால் புதைபெறூஉம் கண்களும் கண்களோ?
என்னைமன்? நின்கண்ணாற் காண்பென் யான்;
நெய்தல் இதழ்உண்கண் நின்கண்ணா கென்கண்மன;

என ஆங்கு,

நெறிஅறி செறிகுறி புரிதிரிபு அறியா
அறிவனை முந்துறீஇத்
தகைமிகு தொகைவகை அறியும்
சான்றவர் இனமாக

வேய்புரை மென்றோட் பசலையும் அம்பலும்
மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடன்நீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்;
பூஎழில் உண்கணும் பொலிகமா இனியே!

இது, தமர் வரைவு மறுத்துழித் தோழி தாய்க்கு அறத்தொடு நிற்ப, அவள் நற்றாய்க்கு அறத்தொடு நிற்ப, அவள் தன்னையர் முதலியோருக்கு அறத்தொடு நிற்ப, அவரும் ஒருவாற்றான் உடம்பட்டமை தோழி தலைவிக்குக் கூறி, தானும் அவளும் வரைவு கடிதின் முடிதற்பொருட்டு வரையுறை தெய்வத்திற்குக் குரவை ஆட, அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு உரைத்தது.

இது கலித்தொகையில் இரண்டாவதாகிய குறிஞ்சியில் மூன்றாவது பாட்டு.

இதைப் பாடியவர் கபிலர்.

# கருங் கூத்து

இரவு நேரம். காதலன் தன் காதலியைக் கண்டு அளவளாவுவதவற்காக வந்து மறைவிலே நிற்கிறான். அவன் இரவிலே வரும்போதெல்லாம் குறிப்பாகத் தான் வந்திருப்பதைப் புலப்படுத்துவான். அங்கே உள்ள பொய் கையிலே ஒரு கல்லை எடுத்து எறிவான். அது துடும் என்ற ஒலியை உண்டாக்கும். தோழி போய்ப் பார்த்து வந்து தலைவியை அழைத்துக் கொண்டு போவாள்.

முதல் நாள் தலைவன் வந்து அப்படி ஒலியை உண்டாக்கினான். அவனைத் தலைவி போய்ச் சந்திக்கவில்லை தோழி அழைத்துச் செல்லவில்லை. அவளுக்கு, எப்படியாவது அந்த ஆடவன், தலைவியை ஊரார் அறியத் திருமணம் செய்துகொண்டு வாழவேண்டுமென்று ஆசை. அவன் நினைத்தபடியே ஒவ்வொரு நாளும் தன் காதலியைக் கண்டு இன்புற்றால், திருமணத்தைப் பற்றி நினைக்கவே மாட்டான். தலைவியைச் சந்திப்பதற்கு இடையூறு நேர்ந்தால் அவன் சிந்திப்பான் திருமணம் செய்துகொண்டால், யாருக்கும் அஞ்சாமல் தன் காதலியுடன் பிரிவின்றி இணைந்து வாழலாம் என்ற உண்மை புலனாகும்.

அதனால் தோழி முதல் நாள் அவர்களைச் சந்திக்கும்படி செய்யவில்லை. இன்றும் அப்படிச் செய்ய அவளுக்கு மனம் இல்லை. ஆனால், திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்ற கருத்தை அவனிடம் உண்டாக்கவேண்டும் என்று விரும்பினாள். அதோடு முதல் நாள் அவனைச் சந்திக்க முடியாமல் போனதற்கு ஒரு காரணம் கூறவேண்டுமே! உண்மையைச் சொல்ல முடியுமா? ஒரு நிகழ்ச்சியைக் கற்பனை செய்து தலைவியிடம் கூறுபவளைப் போன்று, மறைவில் நின்ற தலைவன் கேட்கும்படியாகச் சொல்லலானாள்.

'திருத்தமான அணிகலன்களை அணிந்த பெண்ணே! அதை நினைத்தால் சிரிப்புச் சிரிப்பாக வருகிறது'' என்று தொடங்கினாள்.

தலைவி : எதைச் சொல்கிறாய்?

தோழி : நேற்று இரவு நடந்த கூத்தைத்தான் சொல்கிறேன். ஊரெல்லாம் கூடிச் சிரிக்கவேண்டிய காரியம் அது. வேடிக்கையாகத்தான் இருந்தது. ஆனால் அருவருப்பைத் தரும் இழிவான கருங் கூத்து.

திருந்திழாய்! கேளாய்: நம் ஊர்க்கெல்லாம் சாலும்
பெருநகை, அல்கல் நிகழ்ந்தது;

[சாலும்-தகும். பெருநகை—பெரிய வேடிக்கை. அல்கல்—இரவில்.]

தோழி சிரித்துக்கொண்டாள்.

தலைவி : என்ன நடந்தது? அதைச் சொல்லிவிட்டுப் பிறகு சிரி.

தோழி : நேற்று இரவு மக்கள் எல்லாம் ஒரேயடியாகத் தூங்கிப்போன நேரம்; நள்ளிரவு. அப்போது நான் நம் தலைவர் வருவாரே என்று புறப்பட்டேன். அழகிய மெல்லிய துகிலாலான போர்வையை அழகாகப் போர்த்துக்கொண்டு இனிய சாயலைப் பெற்ற மார்பையுடைய தலைவர் வந்து நிற்கும் இடத்துக்கு அருகே போய் நின்றேன். அப்போது—

ஒருநிலையே

மன்பதை எல்லாம் மடிந்த இருங்கங்குல்
அந்துகிற் போர்வை அணிபெறத் தைஇநம்
இன்சாயல் மார்பன் குறிநின்றேன் யானாக.—

[ஒருநிலையே—ஒரு மாதிரியே. மன்பதை—மக்கட் கூட்டம். மடிந்த-செயலற்று உறங்கின. இருங்கங்குல்—கரிய நள்ளிருள். துகில்—மெல்லிய ஆடை. துகிலாகியபோர்வை. தைஇ—அணிந்து. சாயல்-மென்மை. மார்பன்—தலைவன்

குறி—குறிப்பாக வந்து நிற்கும் இடம். யான் நின்றேனாக என்று கூட்டவேண்டும்; யான் நிற்க என்பது பொருள்.]

தலைவி: அப்போது என்ன?

தோழி: அதைத்தான் சொல்ல வருகிறேன், கேள். குட்ட நோயாளியான ஒரு பார்ப்பான் இந்தப் பக்கங்களில் சுற்றிக்கொண்டிருப்பானே—

தலைவி; யார்?

தோழி அவன் தான், தலைமுழுதும் வழுக்கையாகிக் கம்பளிப் போர்வையும் தானுமாக வந்துநிற்பானே—

தலைவி: கருங் குட்டத்தால் கால் கை குறைந்து கறைப் பட்டு வருவானே, அவனா?

தோழி: ஆம், ஆம்; அவனேதான் நம்முடைய வீதியிலே சுற்றிக் கொண்டிருப்பானே, அந்த முடப் பார்ப் பானைத்தான் சொல்கிறேன்.

தீரத் தறைந்த தலையும்தன் கம்பலும்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநம்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானை

[தீரத் தறைந்த-முழுவதும் வழுக்கையான; தறைதல் தேய்தல். கம்பல்—கம்பலம். காரக்குறைந்து—கருநிறம் சேர அதனோடு குறைந்து போய்; கார—கார்நிறம் அடைய கறைப்பட்டு—இரத்தக் கறையை உடையவனாகி.]

தலைவி: அவனைப் பற்றி இப்போது என்ன?

தோழி: நான் சில சமயங்களில் அவனை இகழ்வேன். அப் போது, "பாவம்! அவனை ஏன் வைகிறாய்? ஏதோ வேண்டியதைக் கொடுத்தனுப்பு. அவனைப் போன்ற வர்களைப் பாதுகாப்பது நம் கடமை" என்று சொன் னாயே, நினைவு இருக்கிறதா?

தோழிநீ போற்றுதி என்றி

[தோழி— தோழியே— போற்றுதி- பாதுகாப்பாயாக, என்றி—என்று சொன்னாய்.]

தலைவி: ஆம், சொன்னேன். அவனுக்கு என்ன?

தோழி: அவன் நேற்று இரவு வந்தான்.

தலைவி: எங்கே வந்தான்?

தோழி: தலைவரை எதிர்பார்த்துக் கொண்டு நின்றேனே, அப்போது அங்கே வந்து சேர்ந்தான்.

தலைவி: அங்கே ஏன் வந்தான்?

தோழி: அந்தக் கூத்தைத்தான் சொல்லப் போகிறேன். எங்கே எந்தப் பெண் நிற்கிறாள் என்று பார்ப்பது தானே அவன் தொழில்? அவன் அங்கே வந்தவன் இருட்டில் சரியாக அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. உற்றுப் பார்த்தான். என்னவோ உளறி னான். பணிவாகக் குழைந்தான் "வேளையல்லாத வேளையில் இங்கே வந்து நிற்கிறீர்களே; நீங்கள் யார்" என்று கேட்டுக்கொண்டே, மெல்ல என் அருகே வந்தான். வைக்கோலைக் கண்ட கிழட்டு எருது போலப் பல்லை இளித்து, போகாமல் பக்கத்திலே நின்றான்.

தலைவி: அவனா?

தோழி: ஆம்; பாவம்! சபலம்! நின்றவன் தன் வெற்றிலை பாக்குப் பையை எடுத்து அவிழ்த்தான். அதிலிருந்து பாக்கை எடுத்து "பெண்ணே, தாம்பூலம் போட்டுக் கொள்கிறாயா?" என்று நீட்டினான்.

அவன் ஆங்கே
பாராக் குழறுப் பணிபாப், "பொழுதன்றி
யார்இவண் நின்றீர்" எனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது,
"தையா அல், தம்பலம் தின்றியோ?' என்றுதன்
பக்கு அழித்துக் "கொண்டீ" எனத்தரலும்.

[குழறு—உளறி. பொழு அன்றி-சரியான நேரமல்லாமல். இவண்-இங்கே. பையென—மெல்ல. வை—வைக் கோல். முதுபகட்டின்—கிழட்டு எருதைப் போல. பக்கத்

தின்-பக்கத்திலிருந்தும். தையால்-தையலே தம்பலம்-தாம்பூலம். தின்றியோ—தின்கிறுயா? பக்கு—பை. அழித்து அவிழ்த்து. கொண்டீ—கொள்வாயாக.]

தலைவி: நீ என்ன செய்தாய்? அதை வாங்கிக்கொண்டாயா?

தோழி: சே! நான் ஒன்றும் வாயைத் திறந்து பேசவில்லை; சும்மா அப்படியே நின்றேன்.

தலைவி: அப்புறம்?

தோழி: அசையாமல் நின்ற என்னை அவன் பெண் பிசாசு என்று எண்ணி விட்டான்போல் தோன்றியது திடீரென்று சிறிது தூரம் விலகி நின்றுன். அவன் பேச்சும் செயலும் இப்போது மாறிவிட்டன. பெரிய தைரியசாலியைப் போல் பேசத் தொடங்கினுன். பாவம்! உள்ளுக்குள்ளே அவன் நடுங்குவது எனக்குத் தெரியாமலா போகும்?

தலைவி: அவன் என்ன சொன்னுன்?

தோழி: "இந்தா, ஏ சிறிய பெண்ணே, நீ என் கையில் வசமாக இப்போது சிக்கிக்கொண்டாய்; நானும் உன்னைப் போலவும் மற்றப் பிசாசுகளைப் போலவும் ஓர் பிசாசுதான். ஆமாம். இதைத் தெரிந்து கொள். என்னை ஏதாவது தொந்தரவு செய்தாய், உன்னைச் சும்மா விடமாட்டேன்; இந்த ஊரில் உனக்கு ஒரு பருக்கை பலிகூடக் கிடைக்காமல் செய்து விடுவேன்; எல்லாவற்றையும் நானே வாங்கிக்கொள்வேன்; தெரிந்ததா?" என்றுன். இன்னும் என்ன என்னவோ பேசினுன். அச்சம் தாங்காமல் அவன் வாய் புலம்பிக் கொண்டே இருந்தது.

தலைவி; நீ ஒன்றும் அவனிடம் பேசவில்லையா?

தோழி: அவன் படபடவென்று பேசுகிறதைக் கேட்டு அவனுடைய நெஞ்சு படபடப்பதை நான் உணர்ந்து கொண்டேன். ஒன்றும் பேசவில்லை. ஆனுல்—

யாதொன்றும்

வாய்வாளேன் நிற்பக் கடிது அகன்று கைமாறிக்
"கைப்படுக்கப் பட்டாய், சிறுமி, நீ; மற்றுயான்
ஏனைப் பிசாசருள் என்னை நலிதரின்
இவ்வூர்ப் பலிநீ பெறுஅமல் கொள்வேன்''
எனப்பலவும் தாங்காது வாய்ப்பாடி நிற்ப,
முதுபார்ப்பான், அஞ்சின ஞதல் அறிந்துயான்—

[வாய் வாளேன்—வாய் பேசாமல். கடிது—விரைவில் கைமாறி—தன் செயலிலே மாறி. கைப்படுக்கப்பட்டாய்—கையிலே அகப்படுத்திக் கொள்ளப்பட்டாய்; சிக்கிக் கொண்டாய் என்றபடி. மற்று யான் என்றது நீ ஒருபிசாசு உன்னையன்றி நானும் ஒரு பிசாசு என்பதைக் குறித்தது. நலி தரின்—துன்புறுத்தினுல். பலி—பேய் பெறும் உணவு. வாய் பாடி—வாயாற் பேசி.]

தலைவி : நீ செய்ததைச் சொல்லவில்லையே!

தோழி : நான் குனிந்து ஒரு கை நிறைய மணலை எடுத்து அவன்மேல் தூவினேன்.

தலைவி : வேடிக்கையாக இருக்கிறதே! அந்த மனிதன் என்ன பண்ணினுன்?

தோழி : மணல் அவன் மேலே விழுந்ததோ இல்லையோ, ஓரேயடியாக அருண்டு போய்விட்டான். கடுமையாகக் கூச்சல் போட்டுக் கத்தத் தொடங்கினுன். ஊரெல்லாம் கேட்கும்படி கூவினுன்.

எஞ்சாது

ஒருகை மணல்கொண்டு மேல்தூவக் கண்டே
கடிதுஅரற்றிப் பூசல் தொடங்கினன் ஆங்கே

[எஞ்சாது—குறையாமல்; நிறைய. கடிது—கடுமையாக. பூசல்-கூவுதல். ஆங்கே—அப்பொழுதே.]

தலைவி : அந்தக் கூச்சலைக் கேட்டு யாராவது வந்து விட்டார்களோ?

தோழி : நான் அங்கே நிற்பேனு? உடனே விரைவாக வந்துவிட்டேன். தலைவரைக் காணச் சென்ற இடத்தில் இந்த முதுபார்ப்பானுடைய ஆசையை வெளிப் படுத்தும் மட்டமான கூத்து, இப்படி ஊரையெல்லாம் எழுப்பும்படி விளைந்தது. அதனுல் அவரைக் காண முடியாமற் போயிற்று. அவர் நம்மைக்கண்டு அளவளாவ முடியாமல் இந்தக் கருங்கூத்து இடையே வந்து தடுத்தது.

தலைவி : அப்படியானுல் அவர் நேற்று இங்கே வந்து நம்மைக்காணுமல் போயிருப்பாரென்று சொல்கிருய்?

தோழி : ஆம். அந்த முதுபார்ப்பான் வராமல் இருந்திருந்தால் நான் அங்கே நின்று தலைவரைப் பார்த்து வந்து உனக்குச் சொல்லியிருப்பேன். நாம் ஒன்று நினைக்க அது ஒன்று நடந்தது. தலைவரைப் பார்க்கப்போன இடத்தில் அந்த வழுக்கைத் தலையன் வந்து சேர்ந்தான். இப்படி எங்கும் திரிந்து எந்தப் பெண் எங்கே நிற்கிருள் என்று பார்த்து அவள் மேலே விழுவதே அவனுக்குத் தொழில்போல இருக்கிறது; என்னவோ பழமொழி சொல்வார்களே, அப்படி ஆயிற்று.

தலைவி : என்ன சொல்வார்கள்?

தோழி : புலிக்குக் கட்டிய வலையிலே குள்ளநரி அகப்பட்டதுபோலே என்பார்கள். அப்படி ஆயிற்றுக் கதை.

தலைவி : பழமொழியா? அது என்ன?

தோழி : சிறிதும் குன்ருத வலிமையையும், கடிய கண்ணையும், நல்ல நிறமுள்ள வளைந்த கோடுகளையும் பெற்ற புலியைப் பிடிப்பதற்காக வேடுவர்கள் காட்டில் பலமான வலையைக் கட்டியிருப்பார்கள். சில சமயங்களில் அதில் குறுநரி அகப்படும். புலிதான் சிக்கியதோ என்று பார்த்தால் வெறும் குள்ளநரி இருந்து ஊளையிடும். அதுபோல இந்தப் பெரிய கருங்கூத்து நேற்று இரவு நடந்தது. அதை நினைக்க நினைக்கச் சிரிப்பாய் வருகிறது.

ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண்
இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுள் ஓர்
ஏதில் குறுநரி பட்டற்றால், காதலன்
காட்சி அழுங்கநம் ஊஉர்க் கெலாஅம்
ஆகுல மாகி விளைததை—என்றும்தன்
வாழ்க்கை அதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து.

[ஒடுங்கா வய-அடங்காத வலிமை. கொடும் கேழ்—வளைந்த கோடுகள்; கேழ்-நிறம்; இங்கே நிறமுள்ள வரிகள். கடுங்கண்-கமையான பார்வையையுடைய. கொண்மார்—பிடிப்பவர்கள். நிறுத்த-கட்டிவைத்த. ஏதில்—புலிக்கு அயலான. குறுநரி—குள்ளநரி. பட்டற்று—பட்டது போன்றது; ஆல்: அசை. காட்சி அழுங்க—நம்மைக் காணும் காட்சி தடைபட. ஆகுலம்—ஆரவாரம். விளைந்ததை-விளைந்ததாகிய; ஐ: சாரியை; பொருள் இல்லை. அது என்றது, பெண்களைக் கண்டு காம உணர்ச்சியால் மேல் விழுவதை. வீழ்க்கை—விருப்பம்; சபலம். கருமை இழிவைக் குறித்தது. வேடிக்கையாக இருந்ததனால், கூத்து என்றாள்.]

இந்த நிகழ்ச்சி தோழியாகக் கற்பனை பண்ணிக் கூறியது இப்படிச் சொன்னதைத் தலைவன் மறைவிலிருந்து கேட்டால், நம்மைச் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு இவர்கள் வந்தும் அது முடியாமல் போயிற்றே!' என்று வருந்துவான். பிறகு, 'களவாக வருவதனால் இதுபோன்ற பல தடைகள் உண்டாகும். அதற்கு இடமின்றி இவளை மணந்துகொண்டு உலகறிய இவளுடன் வாழ்வதுதான் தக்க வழி' என்பதை உணர்ந்து திருமண முயற்சியை மேற்கொள்வான்.

இதனை எதிர்பார்த்தே தோழி தந்திரமாக இந்தச் செய்தியைப் படைத்து மொழிந்தாள்.

திருந்திழாய்! கேளாய்: நம் ஊர்க்கெல்லாம் சாலுப்
பெருநகை அல்கல் நிகழ்ந்தது; ஒருதலையே
மன்பதை எல்லாம் மடிந்த இருங்கங்குல்

அந்துகிற் போர்வை அணிபெறத் தைஇ,நம்
இன்சாயல் மார்பன் குறிநின்றேன் யானகத்—
தீரத் தறைந்த தலையும்தன் கம்பலும்
காரைக் குறைந்து கறைப்பட்டு வந்துநம்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
'தோழிநீ போற்றுதி' என்றி;—அவன் ஆங்கே
பாராக் குழருப் பணியாப், ' பொழுதன்றி
யார்இவண் நின்றீர்?'; எனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது,
"தையால் தம்பலம் தின்றியோ?" என்றுதன்
பக்குஅழித்துக், "கொண்டீ" எனத்தரலும் யாதொன்றும்
வாய்வாளேன் நிற்பக் கடிதகன்று கைமாறிக்,
"கைபடுக்கப் பட்டாய் சிறுமிநீ; மற்றியான்
ஏனைப் பிசாசருள் என்னை நலிதரின்
இவ்வூர்ப் பலிநீ பெருஅமற் கொள்வேன்
எனப்பலவும் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப்பான், அஞ்சின னுதல் அறிந்தியான் எஞ்சாது
ஒருகை மணற்கொண்டு மேல்தூவக் கண்டே
கடிதுஅரற்றிப் பூசல் தொடங்கினன் ஆங்கே;
ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண்
இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுள்ஓர்
ஏதில் குறுநரி பட்டற்றால்; காதலன்
காட்சி அழுங்கநம் மூஉர்க்கு எலாஅம்
ஆகுல மாகி விளைந்ததை, என்றும்தன்
வாழ்க்கை அதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து.

[செவ்வையான அணிகலன்களை அணிந்த பெண்ணே, கேள்: நம்மூராருக்கெல்லாம்போதுமானபெரியவேடிக்கை இரவு நிகழ்ந்தது; மக்கள் யாவரும் ஒரு மாதிரியே தூங்கிப் போன நள்ளிரவு, அழகிய மெல்லிய துகிலாகிய போர்வையை அழகுபெறப் போர்த்துக்கொண்டு, நம் இனிய மென்மையை யுடைய மார்பைப் பெற்ற தலைவன் வந்து சந்திக்கக் குறித்த இடத்தில் யான் நின்றேனாக, முழுவதும் மயிரின்றித் தேய்ந்த தலையும் தன் கம்பலுமாகக்

கருமை பெற்றுக் குறைந்து கறைபட்ட உறுப்புடன்வந்து நம் தெருவினின்றும் போகாத முடவனுகிய கிழப்பருவம் எய்திய பார்ப்பானை, "தோழியே, நீ பாதுகாப்பாயாக" என்று சொன்னாய்.—அவன் அங்கே என்னைப்பார்த்து மொழி குழறிப் பணிவுடன் ஒழுகி, "பொழுதெல்லாம் இங்கே நின்ற நீர் யார்?" என்று கூறி, மெல்ல வைக் கோலைக் கண்ட கிழட்டெருதைப் போலப் பக்கத்தினின் றும் போகாமல், "பெண்ணே, தாம்பூலம் தின்கிறுயா?" என்று தன் பையை அவிழ்த்து எடுத்து, "இந்தா, வாங்கிக் கொள்" என்று நீட்டவே, நான் யாதொன்றும் பேசாமல் நிற்க, அவன் விரைவில் எட்டிச் சென்று நின்று தன் செய்கையை மாற்றிக்கொண்டு, "சிறுமியாகிய நீ என் கையில் அகப்படுத்தப்பட்டாய்; ஆண் பிசாசு நான்; மற்றப் பிசாசுகளுக்குள் என்னை நீ நலிந்தால் இந்த ஊரில் நீ பலிபெருமல் முழுவதையும் நானே பெற்றுக்கொண்டு விடுவேன்" என்று பலவற்றையும் பயம் தாங்காமல் வாயி ஞல் புலம்பி நிற்க, அந்தக் கிழப்பார்ப்பான் பயந்தவனு தலை நான் உணர்ந்து, ஒரு கை நிறைய மணலை எடுத்துக் கொண்டு அவன்மேல் தூவ, அப்போது அதனைக் கண்டு, கடுமையாகக் கத்தி ஆரவாரம் செய்யத் தொடங்கினன். நம்முடைய தலைவன் நம்மைக் காணும் காட்சி தடைபட நம் ஊர்க்கெல்லாம் கேட்கும் ஆரவாரமாகி விளைந்த தாகிய இக்கூத்து—என்றும் இதுவே தன் வாழ்க்கையாகக் கொண்ட முதுபார்ப்பானது வேட்கையைப் புலப்படுத் தும் பெரிய இழிவான கூத்தானது—குறையாத வலிமை யையும் விளைந்த நிறம் பெற்ற கோடுகளையும் கடுமையான பார்வையையும் உடைய கரிய புலியைப் பிடிப்பவர்கள் கட்டிவைத்த வலையில் புலிக்கு அயலான ஒரு குள்ளநரி அகப்பட்டதுபோல் ஆயிற்று.]

இது தலைவன் சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குக் கூறியது.

கலித்தொகையில் குறிஞ்சியில் 29-ஆவது பாடல் இது; கபிலர் பாடியது.